ஸ்ரீ:



# ஸ்ரீராமாநுஜன் 72

வருடச் சந்தா ரூ. 5

## இராமானுச நூற்றந்தாதி பாசுரம்.

கைத்தனன் தீயசமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன் தூயமறைநெறிதன்னை * என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போ டிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை * இராமானுசன் மிக்கவண்மைசெய்தே. (72)

## அறிவிப்பு.

இச்சஞ்சிகையில் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வமென்கிற அரிய பெரியநூலும், மயிலை பேயாழ்வார் திருவுருவப்படமும், அவ்வாழ்வார் திருமஞ்சனக்கட்டியமும் வெளிவருகின்றன. ஸ்ரீமத் வான்மீகி ராமாயண வசனம் சுந்தரகாண்டத்திற்கு மேற்பட்ட பாகம் அடுத்த இதழில் வெளிவரும். சந்தா பாக்கியை அவ்வவர்கள் உடனே அனுப்பவேணும். தனிக்கடிதமெதிர்பார்க்க வேண்டா.

P. B. அண்ணங்கராசாரியர்,

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

1954ஹு அக்டோபர்மீ ஜயஹு ஐப்பசிமீ

# ஸ்ரீ ராமாநுஜன் 72

## மதராஸ் ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் வெளியீடு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய தத்வார்த்தங்களை விளக்குவதற்காக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் :

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் ஜகதாசார்யஸிம்ஹாஸநாதிபதி

**அண்ணங்கராசார்யஸ்வாமி.**

வருடம் 6 | 1954௵ அக்டோபர்மீ ஜயஹு ஐப்பசிமீ | இதழ் 12

### ஸத்க்ரந்தப்ரகாசந ஸபாகார்யதரிசியின் விஜ்ஞாபநம்

அன்பர்களே! நமது ஸ்ரீராமாநுஜபத்ரிகைக்கு ஆறு பிராயம் நிரம்புகிற போது. ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு இது செய்துவரும் ஸேவையைப்பற்றி விசேஷித்து நாம் தெரிவிக்கவேண்டியதுண்டோ? நிகழும் வருஷத்தில் இப்பத்திரிகை பெரும்பாலும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயண வசனமே வெளிவந்திருக்கின்றது. சென்ற மாதத்தில் வெளிவந்த 71ஆம் இதழில் ஸுந்தரகாண்டம் முடிவுபெற்றிருப்பது அன்பர்கள் அறிந்ததே. இனி யுத்தகாண்டமும் உத்தரகாண்டமும் க்ரமேண வெளிவரும்.

இப்பத்ரிகை மூலமாக அநேக உபந்யாஸங்களை (அதாவது) நம் பத்ராதிபஸ்வாமிகளின் பற்பல விஷயமான வியாஸங்களை யநுபவித்துக் களித்துக்கொண்டிருந்த ரஸிகர்களுக்கு, ஸ்ரீராமாயண வசனம் வெளிவரத் தொடங்கினது முதலாக அவ்வநுபவம் குறைந்ததனால் அவர்களுடைய மனத்தில் உண்டான தளர்ச்சிக்குப் பரிஹாரமாக, அருமைபெருமை வாய்ந்த அநேக உபந்யாஸங்கள் கொண்ட இவ்விதழ் வெளியிடப்படுகின்றது. ஸ்ரீஸ்வாமியருளிச்செய்த க்ரந்தங்களுள் சிகரமாக விளங்கும் த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வமென்னும் மஹாக்ரந்தம் இவ்விதழில் வெளியிடப்படுகின்றது. இந்த ஸர்வஸ்வக்ரந்தம் சென்ற மாதத்தில் ஸித்தமாகி முக்கியமான சில மஹான்களுக்கு அபிப்ராயக்ரஹணார்த்தமாக அனுப்பப்பட்டிருந்தது. அவரவர்கள் ஸ்வாபிப்ராயங்களை மிக விரிவாகத் தெரிவித்துள்ளார்கள். அவ்வபிப்ராய பத்ரிகைகளையெல்லாம் பூர்த்தியாக வெளியிடுவதற்கு இதில் அவகாசமில்லாமையினால் பல பத்ரிகைகளை அடியோடு நிறுத்திக்கொள்ளவும், சில பத்ரிகைகளைப் பூர்த்தியாகவும், சில பத்ரிகைகளை ஸங்க்ரஹித்தும் வெளியிட நேர்ந்தது. இவ்வபிநந்தநபத்ரிகைகளோடு கூடிய இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தைப் பண்டிதர்களும் ரஸிகர்களும் அநுபவித்து ஆநந்திக்க ப்ராப்தம்.

சந்தா செலுத்த வேண்டியவர்கள் விரைவில் செலுத்துமாறு பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

இப்படிக்கு
K. திருவேங்கடாசாரி, B.A., B.L.
அட்வகேட், சென்னை - 3.
(ஸத்க்ரந்தப்ரகாசநஸபாகார்யதரிசி.)

## H. H. ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமீ சிவாநந்தஸரஸ்வதீ, ரிஷீகேச்.

ஸ்வாமிகள் அன்புடனே அனுப்பியருளும் நூல்களை, கையில் கிடை வுடனே ஆதியோடந்தமாகப் படித்துப் பார்த்துவிட்டே வேறு பணி நோக்குவ இவ்விடத்து வழக்கமென்பதைப் பலகாலும் தெரிவித்திருக்கிறேன். இன் கிடைத்த த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ நூலையும் அதே முறையில் படி முடித்தேன். ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களில் உபநிடதப் பொருள்க விசேடமாக வுண்டென்பதை இதுகாறும் நான் பெரியார்வாய்க் கேட்டிரு துண்டே யல்லது இவ்வளவு விளக்கமாக அறியப் பெற்றிருந்ததில்லை. இந் எனக்குப் பேருதவி புரிந்ததென்பதைப் பெருங்களிப்புடன் தெரிவித்துக் கொ கிறேன். இதன் தொடர்ச்சியாக மேன்மேலும் வெளிவரவிருக்கும் நூல்களை அருள்புரிக. அவற்றை வெகு ஆவலோடு எதிர்பார்க்கிறேன். அன்பு வாழ்க.

**சிவானந்தா,** ஆனந்தகுடீர், 30—9—

---

## ஸ்ரீமதுபயவே. வித்வான். வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, திருவல்லிக்கேணி.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:. ஸ்ரீமத் வரவரமுநயே நம:. ஸ்ரீஉவே. ப்ரதி வாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் ப்ரஸாதித்தருளிய ஸ்ரீஸூக்தி மாலைகளுக்குள் நாயகமணியாய்த் திகழும் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ மென்கிற க்ரந்தரத்னத்தை இப்போது ஜ்ஞாநலவதுர்விதக்தனான அடியேனுக்கு முன்னைய நல்வினையால் ஆமூலாக்ரம் ஸேவிக்கும் பெரும்பேறு கிடைத்தது. இந்த ஸூக்திமாலை மிகவுந் தெளிவாக விஷயங்களை விளக்கிச் செல்வதால் ஆநந்தஸாக ராந்தர் நிமக்நனானேன். அந்தோ! அடியேன் அங்ஙன் சொல்வதற்குத் தான் தகுவேனோ? அடியேனுடைய தகவுரையால் அந்த ஸூக்திரத்நம் மாசுணணுமோ வென்று அஞ்சுகிறேன். "யத்யத் விபூதிமத் ஸத்த்வம்" என்கிற ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் வசனப்படியே இந்த ஸ்வாமியைக் கார்யார்த்தமாக பகவத்தே ஜோம்ச ஸம்பவரென்றே எண்ணுகின்றேன். "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்க ளொருங்கவிடுவர்" என்ற விடத்திற்கு வியாக்கியானமிடும்போது விசதவாக் சிகாமணியான ஸ்ரீமன் மணவாள மாமுனிகளும் உதாஹரண கொண்டு விளக்காது விட்டிட, அதனை இந்த ஸ்வாமி விளக்கிப் பல இடங்களிலும் ஸ்ரீ ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யாதிகளில் ஆழ்வார்களினருளிச் செயல் கொண்டே பங்க்திகளிட்டிருப்பதைச் செவ்வனே தெள்ளத் தெளியப் பல மேற் கோள் கொண்டு விளக்கியிருப்பதே இந்த ஸ்வாமி அவதார விசேஷமென்பதற்குப் பொருத்தமான நிதர்சநமாம்.

ஸ்ரீவைஷ்ணவ குலோத்பந்நரான சில வித்வான்கள் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி களில் ஸ்வாமி யெம்பெருமானார்க்கு அந்வயமில்லையென்று விபரீத புத்தியுள்ளவர யிருக்கின்றனரே! அங்ஙனுள்ளவர் இந்த க்ரந்தரத்நத்தை ஊன்றி ஸேவிப்பின் விபரீத புத்தியோடு ஆவிலமநஸ்கராயிருப்பதொழிந்து தெள்ளறிவு பெறுவரென் பது திண்ணம் திண்ணம்.

தாஸன் **வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியன்,** 10—10—

---

**ஸ்ரீமதுபயவே. வானமாமலை வித்வான். வா. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி.**

ஸ்ரீஉ-வே. மஹாவித்வான் அண்ணா ஸ்வாமியின் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம் என்ற க்ரந்தரத்னத்தை ஓரக்ஷரம்விடாமல் ஸேவிக்கும்பேறு பெற்றோரில் அடியேனும் ஒருவன். ஞாலமெங்குமுள்ள அபிஜ்ஞர்கள் யாவரும் ஒரு மிடறாய்ப் போற்றும் ஸ்ரீஸ்வாமியின் வைதுஷ்யாதிசயத்தைப் பற்றி அடியேன் இங்கு எடுத்துரைக்க ஆவச்யகதை யில்லை. ஸ்ரீஸ்வாமி ஸாதித்திருக்கும் க்ரந்தங்கள் யாவுமே வித்வதக்ரேஸரமாநநீயதமமாயும் லோகத்திற்குப் பரமோபகாரகமாயும் விளங்கா நிற்கின்றன. அவைகளுள்ளும் இந்த க்ரந்தம் மிகவும் விலக்ஷணமாயே திகழ்கின்றது என்னுமிடம் வாசக வித்வான்களுடைய திருவுள்ளங்களறிந்ததே. நமது பூர்வாசாரியர்கள் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்களுள் தனிச்சிறப்புடனிலங்கும் ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்னும் சூர்ணிகை ஸுப்ரஸித்தமானது. இந்த சூர்ணிகையில் ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர் என்பது உபலக்ஷணம். ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்வீய திவ்ய க்ருதிகளனைத்திலுமே மதாந்தரஸ்தர்களுக்குக் கிட்டாத விசேஷார்த்தங்கள் ஸாதிப்பது ஆழ்வாரின் திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே என்னுமிவ் விஷயத்தை ஸ்ரீஅண்ணாஸ்வாமி இந்த க்ரந்தரத்னத்தில் பல உதாஹரணங்களுடன் அநந்ய ஸாதாரணமான ப்ரணாளியில் விசதீகரித்திருக்கிறார். இதில் உபபாதிக்கப்பட்ட விஷயங்களே கடல் போன்றிருக்க, உபஸம்ஹாரத்தில் ஸ்ரீஸ்வாமி "இந்த நூலுக்கு உத்தேச்யமாகக் கொண்ட விஷய விசேஷ விசதீகரணம் ஒரு நிவலையளவே ஆயிற்றில்; க்ரமேண வேறுவேறு நூல்களில் இன்னமும் விசதீகரிப்போமாக" என்று ஸாதித்திருக்கிறார். ப்ரதி பக்ஷிகளின் மயர்வு நீங்க இந்த க்ரந்தமொன்றுமே பர்யாப்தமாய் இருந்தாலும் அடியேன் போன்றவர்களின் ஸகௌதுகப்ரதீக்ஷையை ஸபலமாக்க ஸ்ரீஸ்வாமி இது விஷயமான வேறு க்ரந்தங்களையும் வெளியிட்டருள வேண்டும் என்று ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் ப்ரார்த்திக்கிறேன்.

அக்னிஹோத்ரம்தாதாசார்யர் இந்த க்ரந்தரத்னத்தின் ஆவிஷ்காரத்துக்கு நிதானமாயிருந்து நமக்கு உபகரித்திருக்கிறார் என்பது ஒரு பக்கமிருந்தாலும் அபிவாதந காலத்தில் "த்ராவிடப்ரஹ்மஸம்ஹிதாத்யாயீ ஸ்ரீவேங்கடேசசர்மா நாமாஹம்" என்று அநுஸந்தித்து வந்த ஸ்ரீதேசிகரின் ஸம்ப்ரதாயஸ்தராகத் தன்னைப் பாவித்துக் கொள்ளுமவர் இவ்வளவு தாழ்ந்த கார்யத்தில் இழிந்தாரே என்று அடியேனதுள்ளம் வருந்துகின்றது. ஸ்ரீதாதாசார்யரும் ஸ்ரீஸ்வாமியின் இந்த க்ரந்தரத்னத்தை ஆமூலசூடம் நன்கு அப்யஸித்து, தான் செய்ததை எண்ணி அநுதபிப்பாரானால் "பாபே க்ருதே யதி பவந்தி பயாநுதாபலஜ்ஜா: புந: கரண மஸ்ய கதம் கடேத" என்னும் மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திப்படி மறுமுறை இம்மாதிரியான கெட்ட கார்யத்தை நெஞ்சாலும் நினையார். தான்செய்த அபசாரத்திற்குத்தக்க ப்ராயச்சித்தம் செய்தவருமாவாரென்பது அடியேனது திடமான அபிப்ராயம்.

கடைசியாக ஓர் விண்ணப்பம். இந்த க்ரந்தரத்னம் ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யாதி பூர்வாசார்ய திவ்ய க்ருதிகளிலுள்ள விலக்ஷணாநுபவபரீவாஹரூபமே என்பது ப்ரத்யக்ஷரம் ப்ரகாசிக்கின்றது. இத்தை அஸக்ருத்பரிசயம் பண்ணி ஒவ்வொரு வாசகரும் கண்ணின் கருமணிபோல் பாதுகாக்க வேண்டும். ஸ்ரீஸ்வாமி நமக்கெல்லாமளித்த இந்த ஸர்வஸ்வத்தை நாம் நமது ஸந்ததிகளுக்குப் பைத்ருகதனமாக அளிக்கவேண்டும் என்பது அடியேனது பேரவா.

இங்ஙனம்:
வா. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார்,
ந்யாயவேதாந்தவித்வான், வானமாமலை,
4—10—54.

Nanguneri,
4—10—54.

## ஸ்ரீமான் உவே. ராவ்பஹதூர். S. ராகவையங்கார் ஸ்வாமி, தியாகராய நகர்.

ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்வாமியின் த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வக்ரந் அச்சிட ஆரம்பித்தது முதற்கொண்டே அடியேன் அநுபவித்து வரு இப்போது பரிபூர்ண க்ரந்தத்தை வாசித்தேன். இந்த க்ரந்தம் பூர்வாசாரியர் காலத்திலேயே அவதரித்திருக்கவேண்டும். இப்போது ஸ்வாமி மூலமாக அவதரித்தது நம்போல்வாருடைய பாக்யம். ஆழ்வார்களிடத்திலும் அ செயல்களிடத்திலும் விப்ரதிபந்நர்கள் பூர்வாசார்யர்களின் காலத்திலேயே தார்களென்று பூர்வக்ரந்தங்களிலிருந்து தெரியவருகிறது. ஆனால் அவ யாவரும் மதாந்தரஸ்தர்களே யொழிய ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தைச் சே வர்களில் ஒருவர்கூட விப்ரதிபத்திகொண்டிருக்க நியாயமில்லை. கலியின் மையினால் ஸ்ரீவைஷ்ணவர்களிலும் ப்ரச்சந்ந தூஷகர்களாகச் சிலர் தோன்றி பதாகக் கேள்விப்பட்டிருந்ததுண்டு. அப்படிப்பட்டவர்களில் ஒருவராயிருந் ப்ரச்சந்நதையை விட்டு ப்ரகாசமாகவே திவ்யப்ரபந்தங்களில் குறைகூறவும் அ பத்ரிகைகளிலும் வெளியிடவும் முன் வந்தார். அவருடைய இருளையும் மருள் போக்குவதை வியாஜமாகக்கொண்டு காஞ்சீபுரம் ஸ்ரீஸ்வாமிகள் ஏற்றின பெருவிளக்கானது குன்றிலிட்ட விளக்காக விளங்குகின்றது. இதனால் இப்பே உலகுக்கு ஏற்பட்டிருக்கிற வெளிச்சம் இதுவரை எந்த க்ரந்தத்தாலும் ஏற் வில்லையென்று சொல்லலாம். எப்படிப்பட்ட பெருங்காற்றடித்தாலும் அணை மாட்டாததான இவ்வொளிகொள்விளக்கு முச்சுடர்விளங்கும் வரை விளங்கும்

S. ராகவையங்கார், 26, பாஜுல்லாரோட், மாம்பலம். (7-10

---

## ஸ்ரீமதுபயவே. சாஸ்த்ரரத்நாகர. வித்வந்மண்டல மண்டந. வித்யாவாரி மதத்ரய நிரூபக. காளி. வங்கீபுரம். வித்வான். ரங்காசாரியர் ஸ்வாமி (புதுக்கோட்டை ஸம்ஸ்தானம் தாநாதிகாரி - ரிடைர்ட்.) தற்கால நிவாஸம் கல்கத்தா. 6-10'-54.

ஸகல கல்யாண குணாலங்க்ருதராய் வித்வத்வரேண்யராய் ஸேவை ஸாதி தருளும் ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி அநுக்ரஹித்தருளிய த்ரமிடோ நிஷத் ப்ரபாவஸர்வஸ்வ க்ரந்தத்தை ஸேவித்து அடியேனடைந்த ப்ரஹ்மானந் அநவதிகம், அநவதிகாதிசயம். ஸர்வஸ்வ க்ரந்தத்தை மிகுந்த விஸ்மயத்துட ஸேவித்தேன். ஏற்கெனவே "ஸகல பூர்வாசார்ய ஸமுதாயாவதாரர்" என் அடியேனால் விருதுசாத்தப்பெற்ற இந்த ஸ்வாமி இந்த க்ரந்த மெழுதி யருளின விஸ்மயவார்த்தைக்கு அவகாசமுமில்லை. இதரர்கள் வெகு ப்ரயாஸப்பட்டாலு எழுத முடியாததான இந்த திவ்யக்ரந்தத்தை ஸ்வாமி ஆயாஸ லேசமுமின்றிக் அவலீலையாக எழுதி யிருக்கிறாரென்பதை அடியேன் உள்ளபடியறிந்தவன். பழைய இதிஹாஸம் இப்போது நினைவுக்கு வருகிறது. 40, 45 வருஷங்களு முன் திருவஹீந்திரபுரத்தில் நாவல்பாக்கம் வித்வான் ஸ்வாமி யொருவர் எ தருளியிருந்து சேட்லூர் நரஸிம்ஹாசார் முதலான சில பேர்களுக்கு மீமாம்ஸா வசனமாரம்பித்து நடத்திவருகையில் வேதப்ராமாண்யம் சொல்லி வரும்பே த்ராவிட பாஷா ப்ரபந்தம் அப்ரமாணம் என்று சொன்னார். அதைக்கேட் சேட்லூர் நரஸிம்ஹாசார் மீமாம்ஸாபாடம் இவ்வளவோடு போருமென்று நிறு விட்டு, த்ராவிட திவ்யப்ரபந்தமே பரமப்ரமாணம், ஸம்ஸ்க்ருத வேதம் ஸாமா

ஒரு புஸ்தகமெழுதி குருசிஷ்ய பாவத்தையும் விட்டு வாக்யுத்தமும் க்ரந்த மும் நடந்தது ஸுப்ரஸித்தம். அந்த வாதம் மறுபடியும் தலைகாட்டுகிறப் போலிருக்கிறது. இந்த துர்வாதம் இனியொருநாளும் தலையெடுக்காதபடி அந் வர்த்த ப்ரதிவாதிபயங்கரஸ்வாமி செய்தருளியிருக்கிற இந்த மஹத்தான க்ரந்த மானது நம்முடைய தர்சநஸ்தர்களால் நிதியாகக் கொள்ளத்தகுந்தது.

பகவத்பாஷ்யகாரர் திவ்யப்ரபந்தங்களையே ஸர்வதா த்யானித்துக்கொண் டும், பிக்ஷாடனம் மாதுகரம் செய்யும்போது திருப்பாவையை யநுஸந்தித்துக் கொண்டு மிருந்து திருப்பாவைஜீயரென்று ப்ரஸித்தியடைந்திருந்ததாக சரித்ர க்ரந்தங்களாலறிகிறோம். அன்றுதொட்டு இன்றுவரையில் திருமாளிகைகளில் நைமித்திகமாய் திவ்யப்ரபந்தங்கள் ஸேவித்து சாத்துமுறை நடத்தும்போது 'ஆழ்வாரெம்பெருமானார் ஸம்பாவனை' என்று நடத்தி வருவதும் ஆழ்வார் பெற்ற தாயார், எம்பெருமானார் வளர்த்த தாயார் என்பதுபற்றியே என்று ஸம்பிரதாயம். இதற்கெல்லாம் வெகு பொருத்தமாக இப்போது அண்ணா ஸ்வாமி ஸாதித்த ஸர்வ ஸ்வக்ரந்தம் பஹுரமணீயமானது. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திவ்யப்ரபந்தமே ப்ரமாணம், இதுவே மோக்ஷஸாதனம், இதில் அந்வயமில்லாதவர்களுக்கு முக்தி வார்த்தையே கிடையாது என்பது ஸத்யம். ஸ்ரீவைஷ்ணவ குலத்திலேயே பிறந்து திவ்யப்ரபந்தங்களில் குறைகூறுவதென்பது திவ்யஸூக்திகளின் சுவையறியாமை யினால் தான். அப்படிப்பட்டவர்கள் விஷயத்தில் "லவண வணிஜ:.........." இத்யாதி தேசிகஸூக்தியைத்தான் நினைக்கவேணும்.

"யத்ர ஸூக்தம் துருக்தம் வா ஸமம் ஸ்யாத் மதுஸூதந, ந தத்ர ப்ரலபேத் ப்ராஜ்ஞ: பதிரேஷ்விவ காயக:." என்கிறரீதியிலே ஸ்ரீஸ்வாமி வாளாவிருந்து விடாமல், தத்வார்த்தத்தை உலகமெல்லாமறிந்து உஜ்ஜீவிக்கட்டு மென்கிற உதா ரஹ்ருதயத்துடன் இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தை உபகரித்ததற்கு உலகமெல்லாம் கூடினாலும் ஒரு கைம்மாறு செய்ய முடியாது. அடியேனும் சதுஸ் ஸஹஸ்ரீ தாத் பர்ய மென்று ஒரு சிறு க்ரந்த மெழுதியிருக்கிறேன். அது அச்சாகவில்லை. அத் வைதிகளுக்கும் திவ்யப்ரபந்தத்தில் ருசியுண்டாகும்படி அது எழுதியிருக்கிறேன். ஆனால் அந்த க்ரந்தத்தின் ப்ரணாளி வேறு. ஸ்ரீஸ்வாமியின் ஸர்வஸ்வக்ரந்தமானது "பகவத்ராமாநுஜ ஹ்ருதயம்" என்று பெயர் பெறத்தகுமென்று அடியேனுடைய அபிப்ராயம்.

காளி. ரங்கதாஸ:. (தற்காலம் - கல்கத்தா) 6-10-54.

---

ஸ்ரீமான் உவே. வித்வான். விஞ்சிமூர். கி. ஆழ்வாரையங்கார் ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூர். (திருக்குறுங்குடிமடம் ஆஸ்தாநவித்வாந்.)

ஸவிநயவிஜ்ஞாபநம்.

"அண்ணிக்குமமுதூறு மென்னாவுக்கே" என்பதற்கு ப்ரதமலக்ஷ்யமான ஸர்வஸ்வக்ரந்தத்தை அடியேன் பன்முறை ஸேவித்து நெடுநாளாக இவ்வுலகுக் கிருந்த ஒரு பெரிய குறை இன்று தீரப்பெற்றதென்று அகங்குளிர்ந்தேன். இந்த க்ரந்தம் அமைந்திருக்கு மழகை அடியேன் புந: புந: பரிசீலனம் பண்ணினதில் அடி யேனுள்ளத்தில் தோன்றியதை உள்ளபடி விஜ்ஞாபிக்கிறேன். "ஸ்ரீபாஷ்ய த்ரமி டகமப்ரவசநம்" என்கிற ச்லோகத்தில் சொல்லுகிறபடி எம்பெருமானார் நியமித் தருளின கைங்கரியங்களில் முதலிரண்டு கைங்கரியங்களான உபயவேதாந்த ப்ரவசநகைங்கரியத்தை நம் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி இடைவிடாது பஹு மாக நடத்திக்கொண்டு வருகிறபடியை எம்பெருமானார் திருவுள்ளம்பற்றி

யுகந்து, தம்முடைய திருவுள்ளத்தில் ஊறியிருந்த அர்த்த விசேஷங்களை இவரொருவர்கசே தோற்றுவித்து இவர் மூலமாகவே இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தை வெளிபிடுவித்துக்கொள்வது உசிதமென்றுகொண்டு அப்படியே செய்து டார் என்பதுதான் உண்மை. ஆழ்வார் "யானாய்த் தன்னைத்தான்பாடி" ளிச்செய்தபடி எம்பெருமானே ஆழ்வார் திருவுள்ளத்தில் பதிகிடந்து மொழியை வெளியிட்டதுபோல ஸ்ரீபாஷ்யகாரர் தாமே நம் ஸ்வாமி திருவுள்ள லிருந்துகொண்டு இவர் பெயரால் இந்த க்ரந்தத்தை வெளியிட்டருளினார் ஸந்தேஹமேயில்லை. ஸ்ரீஸ்வாமி ஸாதித்திருக்கிற பரச்சத - பரஸஹஸ்ர க்ரந் களெலலாம் அதிஹ்ருத்யங்களேயாயினும் கோயிலெம்பெருமானார் திருக்கே விஷயமாக மணவாளமாமுனிகள் "இவ்வுலகி லெந்தமக்கா யெதிராசர்கொ டருளும், எவ்வுருவும் யான் சென்றிறைஞ்சினக்கால்—அவ்வுருவமெல்லாம் தேனும் எழிலரங்கத் திருப்புப்போல், நில்லாதென்னெஞ்சம் நிறைந்து." என் ளிச் செய்தாப்போல் இந்த ஸர்வஸ்வக்ரந்தம் தலைசிறந்து விளங்குகின்ற பதை அடியேன் மாத்திரமன்று, உலகமெல்லாம் உகந்து சொல்லும்.

இப்படி அப்போதப்போது கிளரும் குத்ஸிதவாதிகளைக் கிள்ளிக்களை கணக்கிலே நிரஸித்துக்கொண்டு நம் ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக வை மன்னி வீற்றிருக்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

விஞ்சிமூர் ஆழ்வார்தாஸ: திருக்குறுங்குடி, 5-10-

---

ஸ்ரீமதுபயவே. வித்வத்வரிஷ்டரான

திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி, M.A., B.L., கோகுலம்,

ஸர்வஸ்வப்ரபாவ விஜ்ஞாபநம்.

அடியேனுக்கு அடியோடு கண்ணில்லாமலிருக்கச் செய்தேயும் ஸ்ரீஸ்வா பரமக்ருபையாயனுப்பிய ஸர்வஸ்வக்ரந்தத்தை பலபாகங்கள் ஸேவிக்கச் செ கேட்டு ஆனந்த பரிதனானேன். ஸ்ரீவைஷ்ணவலோகத்திற்கு இது ஓர் ஸர்வஸ் யாகும். ஆளவந்தார் முதலான நம் பூர்வாசார்யர்களும், விசேஷித்து ஸ்ரீபா காரரும் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களை யுபஜீவித்து திவ்யஸூக்திகளரு செய்திருக்கிறபடியை விரிவாகவும் ப்ராமாணிகமாகவும் வித்வஜ்ஜந ஹ்ருதய மாகவும் நிரூபிப்பது இந்த க்ரந்தம். இந்த விஷயத்தில் ஸ்ரீவைஷ்ணவலோகத் ஒருவர்க்கும் விப்ரதிபத்தியில்லை. உபயவேதாந்தைககண்டயம் என்கிற தாஸ டைய க்ரந்தம் ந்ருஸிம்ஹ ப்ரியாபத்ரிகையில் இப்போது முடிவடைந்திருக்கி ஸ்வாமியின் இந்த ஸர்வஸ்வ க்ரந்தமானது ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் பல அபூர்வவிஷயங்களை யெடுத்துக்காட்டியிருப்பது பரமரஸ்யம். இதில் ப 25 முதல் 32 வரையில் கப்யாஸ ச்ருத்யர்த்தவிசாரத்தில் ஆழ்வார்களின் ஸ்ரீஸூ களைக்கொண்டு ஸமந்வயம் காட்டியிருப்பது மிகவும் ஹ்ருதயங்கமம். ஸாமா தையே அவலம்பித்து இந்த க்ரந்தத்தில் விஷயங்களை உபபாதித்திருக்கு அடியேனுக்கு அபாரமான ஸந்தோஷத்தை யளிக்கின்றது.

உபய வேதாந்தங்களையும் தேனையும் பாலையும் கலப்பது போலச் சே பரஸ்பரம் இனிமையையும் சோபையையும் தரும் ப்ரகாரத்தில் பரப்ரஹ்ம குணதிகளை யநுபவித்து ப்ரஹ்மானந்தத்தில் ஆழ்வார்களைப்போல் மூழ் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லோருக்கும் ப்ராப்தம். நம் பூர்வாசார்யர்களெல்லே அப்படியே உபய வேதாந்தங்களில் ஆழ்ந்து இன்புற்றவர்கள். இந்த பரம தத்தை சிலாலிகிதமாக்கி வைத்திருக்கின்ற இந்த ஸர்வஸ்வ க்ரந்தம் ஸர்வ ஸர்வதாநுபாவ்யம்.

தாஸன். அ. வே. கோபாலாசார்யன், திருச்சி, 3-1

## ஸ்ரீமான் உவே. பண்டித. (ஸ்ரீரங்கம்) T. ரங்கராமாநுஜய்யங்கார்.

ஸ்ரீவைஷ்ணவஜகத்துக்கே ஸர்வஸ்வமான ஸர்வஸ்வக்ரந்தம் ஸேவிக்க பாக்யம் பெற்றேன். இது ஸர்வவிதத்திலும் ஸஜ்ஜநமநோஹாரி யாயிருக்குமழகை எளியேன் என்னவென்று சொல்லுவேன் ? அக்நிஹோத்ரம் ஐயங்காருடைய வாதம் சண்டமாருதத்தின் எதிர்ப்பட்ட சருகு போலாயிற்று. இந்நூலுக்கு முன் னுரைதந்து முத்ரணமும் செய்வித்த ஸ்ரீமதுபயவே கும்பகோணம் ராவ்ஸாஹிப், ரங்கஸ்வாமி ஐயங்கார் உண்மையில் பரமபாக்யசாலி; மஹாவிவேகி. அவர் தம் முன்னுரை தொடங்கும்போதே "ப்ரஹ்மஸ்ரீ அக்நிஹோத்ரம் ராமாநுஜதாதா சாரியார்" என்று எழுதியிருப்பது இந்நூலின் ஸாராம்ச ஸர்வஸ்வத்தை முகப்பி லேயே அள்ளிக்கொடுப்பது போலுள்ளது. அவரும் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் தானே யென்று நினைத்து "ஸ்ரீமத் உவே. அக்நிஹோத்ரம்........." என்று முன்னுரை காரர் எழுதியிருந்தாராகில் இந்த ஸர்வஸ்வம் அவதரித்தது விபலமாகியே யிருக்கும். அவருடைய உண்மை வடிவத்தை ப்ரஹ்மஸ்ரீ என்கிற விசேஷணம் (அல்லது) உபபதம் என்ன அழகாகக் காட்டுகிறதென்று வித்வான்கள் இதிலேயே ஸ்தம்பித்து நிற்கிறார்கள். வாஸ்தவமாகவே அவர் உபயவேபட்டத்திற்கு ஆசைப்படுகிறவருமல்லர். அவருக்குக் கடிதமெழுதுகிறவர்கள் யாராவது உவே. என்று எழுதிவிட்டாலும் வெறுப்பும் வருத்தமும் அடைகிறவரே அவர். இப் படிப்பட்ட வருத்தத்தை அவர் இனி ஒருநாளும் அடையாதபடிக்கு மஹோபகாரம் செய்வித்தது இந்த ஸர்வஸ்வ மஹாக்ரந்தம்.

ஆனால் அடியேனுக்கு ஒரு வருத்தமுண்டாயிற்று, அதை உள்ளபடி விஜ்ஞா பிக்கிறேன். இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தில் ஸ்ரீமந்நிகமாந்த தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி களிலிருந்து விசேஷமாக எடுத்துக்காட்டியிருக்கின்ற ஸ்ரீஸ்வாமியின் திருவுள்ள மென்னவென்றால், அக்நிஹோத்ரமையங்கார் தேசிக ஸம்ப்ரதாயஸ்தராகையாலே அவர் தேசிக ஸூக்திகளைக் கண்டு திருந்திவிடக்கூடும் என்பது போலும். இது னை அபிநிவேசம். தேசிகன் த்ரமிடோப நிஷத் தாத்பர்யரத்நாவளியும் ஸாரமும் பாதுகாஸஹஸ்ரமும் ஸாதித்திருக்கிறாரென்பது அக்நிஹோத்ரமையங் காருக்குத் தெரியாமலா இருக்கிறது. ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்யங் களும் தேசிக ப்ரபந்தங்களென்று வழங்கப்படுகிற தமிழ்ப்பிரபந்தங்களும் தேசிகன் ஸாதித்தவையல்ல என்று அவர் பிரசாரம் செய்துகொண்டிருந்தாலும் பாதுகாஸ ஹஸ்ராதிகள் தேசிக க்ருதியல்லவென்று இதுவரை அவர் சொல்ல முற்படவில்லை. ஆனாலும் தேசிகனை அவர் நிள்ளுக்கீரையாகவே நினைத்திருக்கிறார். நேரில் அநுபவித்தவொரு விஷயத்தை மனம் தாளாமல் இங்கு வெளியிடுகிறேன். ஓரிடத் தில் இவர் ராமாயணப்ரஸங்கம் செய்துகொண்டிருந்தார்; அது மஹர்ஷிகளின் படியுமல்ல, மஹாகவிகளின் படியுமல்ல; பூர்வாசார்யர்களின்படியுமல்ல. ஏதோ ஜெர்மனியென்றும் ஜப்பானென்றும் அமெரிக்காவென்றும், பொலிடிகல் பாயிண்ட் டில் பேசுகிறேனென்றும் சொல்லிக்கொண்டிருந்தார். அஹல்யையின் பேச்சு வரும்போது இவள் கல்லாய்ப் போனளென்று சிலர் சொல்லுவது மடத்தனம் என்றார். உடனே ஒரு வித்வான் எழுந்து, ஸ்வாமீ! அவஸரப்பட்டு அப்படி சொல்லத்தகாது, தேசிகன் பலவிடங்களில், இதைப்பற்றி ஸாதித்திருக்கிறார். சிலாதே: ஸ்த்ரீத்வாதி:" "யோஷித்பூத த்ருஷந்தி" 'ஜஹநுபலதநு" "சாபா தவதா த்ருஷத்தா துர்ஜாத" என்றிப்படி ஏராளமான ஸ்ரீஸூக்திகளை கவனி யாமல் சொல்லலாகாது என்றார்; அதற்கு இவர் சொன்னபதில்—அதெல்லாம் எனக்குத் தெரியாமலில்லை; அதெல்லாம் பேத்தல்......என்றார். உடனே அந்த ஸ்வாமி இவரோடு நாம் பேசத் தகாது என்று சொல்லிக்கொண்டே போய்விட் டார். ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவருமே எழுந்து போய்விட்டார்கள். சில பஸ்மதாரி களை வைத்துக்கொண்டு ஏதோ குழப்பிக்கொண்டிருந்தார்.

இப்படிப்பட்ட விவர்க்கு தேசிக ஸ்ரீஸூக்திகளைக் காட்டுவதனால் என்ன ஆகும்? ஸ்ரீராமாநுஜரையோ ஆளவந்தாரையோ எவரையும் இவர் மதிப்பவர் ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களில் ஒருவரும் பசுமாரணகர்மதாருணர்களாக இல்லையென்று இவர்க்கு வருத்தமும் கோபமும் அதிகம். இவர் ஸமீபகாலத்தில் ஆளவந்தாரிடத்திலும் அபசாரப்பட்டு ஹிண்டுவிலேயே ஒரு வியாஸமெழுதி வெளியிட்டிருந்தார்; அதற்கு ஸ்ரீ உவே. வித்வான். கோழியாலம் ரங்கநாதாசார்யர் எழுதிய மறுப்பு, ஸ்ரீவைஷ்ணவஸுதர்சநபத்ரிகையில் சென்ற மாதத்தில் (ராப்...) வெளியிட்டிருக்கிறது. ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக்குக் குறை கூறுவதையே ... கர்மாநுஷ்டானமாகக் கொண்டவர் இவர் என்பதை அறியாதபேர்களில்லை.

இவர் இப்போது ஒரு விதத்தினால் ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு மஹோபகாரராகவும், ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவராலும் நித்யம் ப்ராதஸ்ஸாயம் ஸ்மரணீயராகவும் ஆய்விட்டார்; இதுவொரு பாக்ய விசேஷமே. 'யேந கேந ப்ரகாரேண ப்ரஸித்த: புருஷோ பவேத்' என்றது இவர்க்கு நன்றாய்த்தகும்.

(இந்த ஸ்ரீமுகம் மிக விரிவாக இருப்பதால் இவ்வளவோடு நிறுத்தப்பட்டது)

T. ரங்கராமாநுஜய்யங்கார். (பள்ளத்தூர்,) 6-10-...

---

## ஸ்ரீமான் உவே. வித்வான் ராமாயண பூஷணம். கோமல் T. சேஷாத்ரி ஐயங்கார் ஸ்வாமி

ஸ்வாமி ஸாதித்த த்ரமிடோபநிஷத்ப்ரபாவ ஸர்வஸ்வக்ரந்தத்தை பரம ஸந்தோஷத்துடன் ஸேவித்தேன். அதன் ருசியை நன்றாயநுபவிக்க மூன்று தடவைகள் ஸேவித்தேன். அத்யத்புதமாயிருக்கிறது என்பது தவிர வேறொன்றும் மெழுதத் தோன்றவேயில்லை. அருளிச்செயல்களை ஸ்ரீபாஷ்யத்தோடு ஸமந்வயம் பண்ணியிருப்பது மிகவும் அழகு. ஸ்வாமியின் க்ரந்தத்திலுள்ள விஷயங்களை அடியேனும் உபந்யாஸங்களில் ஸ்வாமி ஸாதித்த விஷயமென்று சொல்லிக்கொண்டிருக்கிறேன். ஜகத்விக்யாதரான ஸ்வாமியின் வைதுஷ்யத்தை அடியேன் எடுத்துப்பேச அதிகாரியா? விஷயங்களை யெடுத்துரைக்கும் ஸாமர்த்தியம் ஸ்வாமிக்கே அஸாதாரணமானது. ஸ்வாமி ஸாதித்த அருளிச்செயல் வியாக்யானங்களையெல்லாம் ஸேவிக்க மிகுந்த ஆவலுள்ளவனாக இருக்கிறேன்.

தாஸன். ராமாயண பூஷணம்: T. சேஷாத்ரி,
மதராஸ், 6-10-...

---

## ஸ்ரீமான் உவே. (உப்பிலியப்பன் ஸந்நிதி) வங்கீபுரம். நவநீதம். சேஷாத்ரி ஆசார்யர், B·A, B.O.L சிரோமணி; வித்வான். அண்ணாமலை யூனிவர்ஸிடி, ஸம்ஸ்க்ருத லெக்சரர்.

ஸ்ரீமத்வேதமார்க்கேத்யாதி விசேஷணங்களை நாம் பலபேர்களுக்கும் எழுதிக் கொண்டிருந்தாலும் ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியொருவரே அந்த பிருதாவளிகளை அந்வர்த்தமாக வஹிப்பதற்கு உரியாரென்பதை ஏற்கெனவே ஸ்ரீஸ்வாமியின் பலக்ரந்தங்களினால் உலகமுணர்ந்திருந்தாலும் இப்போது ஸ்ரீஸ்வாமியாலருளிச் செய்யப்பட்டு வெளிவந்திருக்கின்ற த்ரமிடோபநிஷத்ப்ரபாவ ஸர்வஸ்வ...

தம் அதை ஸுப்ரதிஷ்டிதமாக்கி விட்டது. இதுவரை வியாக்கியான
வும் ஸ்வதந்த்ரக்ரந்தரூபமாகவும் வெளிவந்துள்ள ஸ்ரீஸ்வாமியின் க்ரந்தங்
ளே இந்த ஸர்வஸ்வக்ரந்தம் அத்யத்புதமாகவும் அகில ஸ்ரீவைஷ்ணவ
ஸர்வஸ்வமாகவும் அமைந்துள்ளது என்பதற்குமேல் அதிகமாக எழுதுவது
யென்று நிற்கிறேன்.

V. K. சேஷாத்ரிதாஸன், திருவிண்ணகர், (5-10-'54).

---

நாச்சியார்கோயில் (திருநறையூர்) ஸ்ரீமதுபயவே. வித்வான்
நடாதூர். ராகவாசாரியர் ஸ்வாமி, குளித்தலை.

ஜகத்விக்க்யாதரா யெழுந்தருளியிருந்த அடியேனுடைய திருத்தகப்பனாரா
ஷ்ணமஹாதேசிகனுடைய காலத்திலிருந்து அடியேன் ஸ்ரீகாஞ்சீ ஜகதா
ஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமியின் பல்வகை நூல்களையும்
க்ருத் ஸேவிக்கும்படியான பாக்யம்பெற்றவனென்பதை விஜ்ஞாபித்துக்
ள்ள அவகாசம் கிடைத்ததற்கு தந்யவாதம் ஸமர்ப்பித்துவிட்டு, ப்ரக்ருதம்
வாமி திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்ற த்ராமிடோப நிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ
ந்தத்தை ஆபாத சூடமநுபவித்ததனுலுண்டான ப்ரஹ்மானந்தத்தை ஸ்வல்பம்
ஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய பரம்பரையில்
ந்தவர்களுக்கு உபய வேதாந்தங்களும் இரு கண்களாக விளங்குவன. அதில்
விட வேதாந்தம் வலக்கண்ணாகவும் ஸம்ஸ்க்ருத வேதாந்தம் இடக்கண்ணாகவும்
ள்ளப்படுவதற்கு ஔசித்யாதிசயமுள்ளதாக அடியேனுடைய திருத் தகப்பனார்
க்கடி ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். அந்த ஔசித்யாதிசயத்தை இந்த
வஸ்வக்ரந்தத்தின் மூலமாகவே அடியேன் விசதமாக வறியப்பெற்றேன்.
த் ராமாநுஜதர்சநத்திற்கு மஹாநிதியென்று போற்றத்தக்க இந்த மஹாக்
த்தின் அருமை பெருமைகளை உள்ளபடி யெடுத்துரைக்க அடியேன் அதிகாரி
லன். இந்த க்ரந்தத்தை எத்தனை தடவை ஸேவித்தாலும் த்ருப்தியே உண்
வதில்லை. பகவத்பாஷ்யகாரதர்சநஸ்தர்களாய் விவேகிகளாயுள்ளவர்கள் இந்த
வஸ்வத்தை தினப்படி ஒருகால் ஸேவித்து வந்தால் அவர்களுக்கு உபய
வதாந்த ரஹஸ்யங்களும் கையிலங்கு நெல்லிக்கனியாகும் என்பதே அடியே
டைய விஜ்ஞாபநஸர்வஸ்வம்.

N. K. ராகவதாஸன், வைகநல்லூர், (குளித்தலை) 2-10-54.

---

ஸ்ரீமதுபயவே. வித்வான். பகவத்விஷயரத்நதீபம். இளையவில்லி.
தி. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, திருக்குடந்தை.

# அடியார்க்கின்பமாரி

ஆழ்வார் திருவடிகளிலும், அவர்கள் கண்டு வெளியிட்ட திவ்ய ஸூக்திகளி
டுபட்ட ஆசார்யர்களிடத்தில் அளவிறந்த பத்தியையுடையராய், உபயவேத
தாந்தங்களையும் ஸதாசார்யர்களிடம் அடிபணிந்து முறைப்படி ஓதித்தெளிந்
ருக்கும் மஹான்களின் திருவடிகளில் தலைவணக்கிக் கைகூப்பி நின்று அடி
யனுடைய பேரானந்தத்தை ஒரு சிறிதளவு விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன்.

இதர ஸித்தாந்திகளெவர்க்குமின்றி, ஸ்ரீ ராமாநுஜ தர்சனத்தவர்களாலேயே அஸாதாரணமாக வநுபவிக்கப்பட்டு வருவதும், ஸம்ப்ரதாயமாக இருந்து வருவதுமான வடமொழி தென்மொழி வேதங்களில் என்றும் இங்குமங்குமெங்கும் எவராலும் ஏற்றமாகப் போற்றப்பட்டு வருகிற "திவ்யப்ரபந்தம்" என்கிற ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளில் ஆழ்ந்த வநுபவங்களை ஓரிடத்தே ஒருங்கச் சேர்த்தருளி வித்து, ஸ்ரீ. உ. வே. ப்ரதிவாதி பயங்கரம், மஹாவித்வான், அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் இப்பொழுது எழுதி அச்சியற்றப்பெற்ற "த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்" என்கிற உத்தமோத்தமமான ஓர் அநுபவ வெளியீட்டை ஓரெழுத்தும் விடாமல் 80 பக்கங்களையும் மேன்மேலும் எழும் அவாவுடன் அநுபவிக்கும் பாக்கியம் பெற்றவர்களில் அடியேனுமொருவனுனேன்.

இந்த பாக்கியம், திருக்குடந்தையில் தமிழ்வேதம் மறையாதே காட்டியருளிய ஸ்ரீ ஆராவமுதாழ்வானின் குடியடியாராய்ப் போந்து தமிழ்வேதமறிந்த பகவர்களில் தலைசிறந்து விளங்கி, நாலாயிர அத்யாபகர்களாக அத்தாணிச்சேவகத்திலமர்ந்து, தம்மடியார்களையும் அப்படியிலேயே அமரும்படி அருள்புரியவல்ல மஹாத்மாக்களின் ஸந்ததியில் குடல் துவக்காலேதான் அடியேன் பெறப்பெற்றேனென்றால் இது சிறிதேனும் மிகையாகாது. இந்த ஸர்வஸ்வக்ரந்த மூலமாக ஆழ்வார்களுடைய ஸூக்தி யநுபவங்களில் மெய்மறந்து அநுபவித்துக் கொண்டே சென்றனனாதலால், அநுபவங்களெல்லாம் அடியேனுக்கு ஆனந்தாவஹமாகவே விளங்கி நின்றன. இந்நூலுக்கு இந்நூலாசிரியரால் இடப்பட்ட "த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்" என்கிற திருநாமத்தில், "த்ரமிடோபநிஷத்" என்கிற சொல், புதிதாக இவ்வாசிரியர் வெளியிட்ட வார்த்தையல்ல; முன்னோர்களனைவரும் ஒரே அபிப்ராயமாக அநுஸந்தித்துப் போந்ததேயாம்.

இந்தத் திருநாமத்தின் போக்யதை, ராமாநுஜ தர்சனத்தைச் சேர்ந்தவர் எவர்க்கும் தித்தித்திருப்பதோடு, ஆசார்யஹ்ருதயம் முதல் ப்ரகரணம், 65ஆம் சூர்ணையான "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்பதற்கேற்ப, அந்த பாஷ்யகாரரே மறுபடியும் ஸ்ரீ தேசிகனாகவவதரித்து அவர் திருவாக்கினால் "பொய்கைமுனி" என்று தொடங்கி, "இவர்கள் மகிழ்ந்து பாடும் செய்ய தமிழ்மாலைகள் நாம்தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று, தெள்ளியார் பலரும் தலைநாலுக்கிக்கொண்டாடும்படி பணித்தருளி நின்றால் வாஸ்தவமான ஸ்ரீ நிகமாந்ததேசிக பக்தர்களனைவருக்கும், இத்திருநாமம் "தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடி, அர்ச்சாவதாரத்திற்கே பெரும்பான்மையும் ப்ரமாணதமமான இச் சப்தராசிக் கேற்பட்ட திருநாமம் என்பது கொண்டு "தேனூறி யெப்பொழுதும் தித்திக்குமே" என்கிறபடியிலன்றோ கொண்டாடத்தகும். "சந்தமிகு தமிழ் மறையோன்" என்ற தனிப்பெருமை பூண்ட தம்மையும், தம்மைப் பின்பற்றி வாழ்வாரையும் கணித்தன்றோ "நாலாயிரமு மடியோங்கள் வாழ்வே" என்று திருவுள்ளம் பூரித்துத் திருவாய் மலர்ந்தருளினர் நம் தேசிகனர்.

அப்படித் தம் அநுபவங்களை யாரேனும் சிலர் அநுபவிக்காது போவது தக்கதில்லையென்று அவர்களையும் தகவுடன் திருத்திப் பணிகொள்ளுமவராய் விருந்தும், "கலகண்ட கணஸ்வாத்யே காமஸ்யாஸ்த்ரே நிஜாங்குரே, நிம்ப ருத்திபிருத் கீர்ணே ந சூத: பரிதப்யதே" என்றும் ஒருபடி அருளிப் போந்தார்.

ஆகவே, நமக்குப் பூர்வாசார்யர்களநுபவங்கள் தனித்தனியே நிற்க, அவ்வநுபவங்களனைத்தும் திரண்டெழுந்து நிற்கிற திருமலைமால் திருமணியாயவதரித்து செய்த வள்ளலின் திவ்ய க்ரந்தங்களினுடைசையொன்றே எல்லா வநுபவங்களை

இங்கு மங்கு மெங்கும் தரவல்லதானதாலே, இக்கிரந்தத்திற்கு இடப்பட்ட திருநாமமே மிக்க சுவையுடன் விளங்கி நிற்கிறது.

இந்த த்ரமிடோபநிஷத்து வடமொழி வேதம்போல் நித்யம் என்பதும், ஆழ்வார்கள் கண்டு வெளியிட்ட மாத்திரமே என்பதும், சில ரிஷிகளின் ப்ரவசனநிதிகளை யிட்டு வடமொழி வேதத்தில் சில பெயர்கள் விளங்குகிறதுபோலவே "சடகோபன் சொல்" முதலியதென்றும், இப்படி வடமொழி வேதத்தின் ஒற்றுமைப் பாடோடு, ஸத்ஸம்ப்ரதாயப்படிகளில் ஸ்ரீவைஷ்ணவத்திரளில் ஆராயும்போது பலபடிகளில் தவும் ஏற்றமுற்றுமிருக்கும்.

"தென்குருகூர்ப் புனிதன் கவி ஓர் பாதத்தின் முன் செல்லுமே தொல்லை மூலப் பரஞ்சுடரே" என்று கவிச்சக்கரவர்த்தி பேசும்படி விளங்கி நிற்கும் திவ்ய ப்ரபந்தத்தின் பெருமையை ஸத்ஸம்பிரதாய மறிந்த பல மஹான்கள் பேசி நிற்பர்கள். இவ்வண்ணம் பேசியநுபவித்த மஹான்களில் சிலரை இங்கு தியானிப்பதும் பரம பாக்கியமேயாகும். ஸ்ரீ உ. வே. மஹாவித்வான்களான காஞ்சீ, அய்யா, க்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமி, திருவஹீந்திரபுரம் சேட்டலூர், நரஸிம்மாசார்ய ஸ்வாமி, கோஷ்டீபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி, ஒப்பிலியப்பன் ஸந்நிதி, நவநீதம், க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, தேவனார் விளாகம், ப. ஸ்ரீவேங்கடாசார்ய ஸ்வாமி முதலான மஹான்கள். இவர்கள் போன்ற மற்றும் சில மஹான்களும் நம் வைணவத்திரளில் ஆழ்வார் ஸூக்திப் பெருமை வெளியாகு மிடங்களில் நினைக்கத்தக்கவர்கள்.

ஸ்ரீ ஆளவந்தார், பாஷ்யகாரர், ஆழ்வான், பட்டர், தேசிகன், திருக்குடந்தை தேசிகன் முதலான வனைவரும், தாங்களருளின தோத்திரங்களனைத்திலும், திவ்ய ப்ரபந்தவநுபவங்களையே சப்தத்தினாலும் அர்த்தத்தினாலும், தாத்பரியத்தினாலும் பெரும்பாலும் நன்கு புலப்படவைத்தே அருளியிருக்கிறார்களென்பதை தமிழ் வேதக்கடலில் ஆழ்ந்து சீரிய செழும்பொருளை ஆசார்யனருளால் பெற்ற பாக்கியசாலிகர்களனைவரும் அறிவார்கள்; அப்படியுள்ளவர்களுக்கு ஆனந்தத்தை அதிகப்படுத்தும் க்ரமத்திலும், அப்படியறிய அவகாசமில்லாதவர்களுக்கும் அறிவித்து உபகரிக்கும் க்ரமத்திலும் இந்த ஸர்வஸ்வக்ரந்தம் வெளியிடப்பட்டிருக்கிறது.

இதனில் பக்கம் 5 பாதியிலிருந்து 6 ஆவது பக்கம் முடிய, வடதேசத்தில் ஒரு சாஸ்திரிகளின் ஈடுபாட்டைக் கண்டு களிப்பது முக்கியமாகும்; 28 பாதியில், "அநந்தகுண ஸாகர" ஸூக்திக்குப் பெரிய திருவந்தாதி 69, மிகுந்திருமால் சீர்க்கடலையுள் பொதிந்த. என்கிறவிடம்; தேசிகன் இப்பாசுரத்தைத் திருவுள்ளத்திற் கொண்டே அம்ருதாஸ்வாதினியில், "சீர்க்கடலின் நிரையன்ன" என்று ஒரு பாசுரமிட்டிருக்கிறார்; 25+40, கப்யாஸ ச்ருதி விவரணம், "ஸ்வாதீந" இத்யாதிகத்ய வாக்கியத்திற்கு உயர்வறப்பதிகத்தில், 4-5-6 பாட்டுக்களின் விவரணம், (கிரீட மகுட சூடாவதம்ஸ) என்பதற்கு, திருவிருத்தம் "பாரளந்த பேரரசே" இத்யாதி விவரணம். (பரித்ராணயஸாதூநாம்) என்பதற்கு, "மழுங்காத வைந்நுதிய" பாட்டு விவரணம், 50ல் ஸ்ரீபாஷ்யத்தில், "நச பரமபுருஷ:" "வாரிக்கொண்டுன்னை" என்கிற விவரணம், மேல் 53 வரை, "வாஸு தேவஸ்ஸர்வம்" என்பதற்கு ஆழ்வாரையநுபவிப்பது. 57-58ல், துஷ்யந்திச ரமந்திச "நெரித்தெழுதி" பாசுர விவரணம், 61, ழ் பாகத்தில் "உளனெனில்" பாசுரமும் ஸ்ரீபாஷ்ய ஸூக்தியும், 64ல் "யத்பதாம் போருஹ" ஆச்சர்யமான விவரணங்கள், 67ல், "உடன்மிசை யுயிரென" விவரணம், மேலே பல பக்கங்களில், ஆளவந்தார், ஆழ்வான், பட்டர் இவர்களநுபவம் உபஸம்ஹார அழகும் அனைத்தும் வெகுரஸம்.

இப்படி ஏதோ சில பக்கங்களைக் குறிப்பிட்டது அடியேன ஒரு போக்கு வீடேதவிர வேறில்லை. முழுவதும் ரஸமயமான விதனை தாக்கள் முழுவதும் அகங்குழைந்தே அநுபவிப்பர்களென்பதில் ஸந்தே இப்பொழுது ஒரு திவலையையே வெளியிட்டிருப்பதாக ஸ்வாமியருளி மேன்மேல் இதன் விரிவான வியாஸங்களையே எதிர்பார்த்திருக்க எவரும் பட்டிருப்பர்கள்.

ஸ்வாமியின் இந்தக் கிரந்தத்தை அநுபவிக்குமவர்களுக்கு, "ஆரா னும் செய்ய, அகலிடத்தை யாராய்ந்து அது திருத்தலாவதே" ஸ்ரீஸூக்தியின்படி, ஆழ்வார் ஸூக்தியில் அநுபவவர்த்தகமான க்ரந்தங்கள் ஆசை வளருமல்லது, வேறு பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துறையின் பார்ச்வத்திலு செல்லாது என்பதை மட்டில் விண்ணப்பித்து, இப்பொழுது இதனை நி கொள்ளுகிறேன்.

ஜயபுரட்டாசி
திருவோணம்
திருக்குடந்தை

இளையவில்லி, தி. ஸ்ரீநிவாஸ

---

ஸ்ரீ

## உணர்ச்சி விண்ணப்பம்

(ஸ்ரீமதுபயவே. வித்வான். வித்யாவிசாரத. வங்கீபுரம் நவநீதம். ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி திருவிண்ணகர்).

நவீந விவாத க்ரந்தங்கள் அடியேமுக்கு இனிப்பதில்லை. வி தில் புக்க இருதிறத்தாரும் தத்தம் வல்லமையைக் காட்டுவதே அதன் பய எத்தனை ஆதாரங்கள் காட்டினுலென்ன? அவரவர் தாங்கள் கொண்ட கையை மாற்றிக்கொள்ளுதல் ஒருபோதுமில்லை. ஆனுல் ஸர்வஜ்ஞரான நா கள் முதலிய ஸகலாசார்யர்களும் ஆய்ந்தறிந்து ஒரு மிடருய் உறுதிபடுத்திக் விஷயங்களில் நாம் தலையிட்டுச் சர்ச்சை செய்வது நம் ஸ்வரூப விரு ஸ்ரீராமானுஜ தரிசனத்தில் நிலைபெற்ற நமக்குள் அருளிச்செயலுக்கு மு கண்டு உணர்த்திய பெருமையைப் பற்றி ஆக்ஷேபம் எழுவதும் அதற யிறுப்பதும் மிக்க வருத்தத்தை விளைவிப்பன.

வேதத்திற்கு உள்ள அருமை பெருமைகளை மறைப்பவர் யாருமிலர். துக்கும் மூலம் வேதமே என்பதையும் அதைத் தழுவிய நூல்களே ப்ரமாண தக்கன என்பதையும் எவரும் மறுக்கத் துணியார். ஆனுல் கடல் போன்ற தினின்று ஸாரதமமான அர்த்தங்களை அறிவது அரியதாகும். வேதாந்த யார்த்தங்களை நமக்குத் தெளிவாக விளக்குவதில் அருளிச்செயலுக்கு ஈட ஒன்றுமில்லை யென்பது நம்பூர்வாசார்யர்கள் அனைவரும் கண்ட உண்மை. யுகத்தில் முதலாழ்வார்களும் இந்த யுகத்தில் நம்மாழ்வார் முதலிய ஆழ்வார் ஸகலவேதாந்த ஸார தமார்த்தங்களையெல்லாம் அமுதப்பெருக்கான தம் களில் பொதியவைத்து நமக்கு அருளினர். எம்பெருமானுடைய பல்வேறு அ களாலும் திருந்தாத உலகத்தைத் திருத்தியமை பற்றி ஆழ்வார்களின் அ அபிநவதசாவதாரமென நம் தேசிகனுல் போற்றப்பட்டது.

அருளிச்செயல் செய்த செயல்கள் யாவை? வேதம் செப்பும் பொருள்களில் ஸாரதமமானவற்றைத் திரட்டியது; பராவரதத்துவங்களை நிர்ணயித்துக் கொடுத்தது; எம்பெருமானுடைய திவ்ய மங்களவிக்ரஹம் திவ்யாத்மஸ்வரூபம், திருக்கல்யாண குணங்கள், உபயவிபூதி யோகம் முதலியவற்றை விளக்கியது; பகவத்குணாநுபவத்தில் மண்டி இவ்வுலகிலேயே பரிபூர்ணாநுபவத்தைப் பெறச்செய்தது. இத்தகைய எல்லையற்ற உதவிகளை முழுவதும் பயன்படுத்திக்கொண்டு தந்யர்களான ஸகலபூர்வாசார்யர்களும் அருளிச் செயலின் அருமைபெருமைகளை உள்ளத்துக்கொண்டு அதை உபப்ரும்ஹணங்களுள் தலை சிறந்ததென்றும் வடமொழி வேதத்தைப் போன்றதென்றும் அதினும் சிறந்ததென்றும், வேதம் செய்யும் தொண்டினை இன்னும் திறம்படச் செய்தலால் வேதத்தை இளைப்பாறச் செய்வதென்றும் பலபடியாகப் போற்றினர்.

இப்பொழுது வெளியாகும் இந்த 'த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம்' என்னும் க்ரந்தம் அருளிச்செயலைப்பற்றிய சில ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம் செய்யப் பிறந்ததாய்த் தோன்றினும் முழுதும் நோக்கும்போது இது சிறந்த அநுபவ க்ரந்தமாகவே கொள்ளற்குஉரித்து என்பது புலனும். எம்பெருமானருடைய ஸ்ரீஸூக்திகள் அனைத்தும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளாகிய அமுதவெள்ளத்தில் மூழ்கித் திளைத்ததன் பயனாக அவதரித்தவை என்னும் உண்மை இக்கிரந்தத்தில் மிகமிக அழகாக விளக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ P. B. A. ஸ்வாமி இந்நூலில் பல் வேறிடங்களில் செய்துள்ள விவரணம் படிப்பவர்களின் உள்ளத்தை உருக்குமென்பது ஒருதலை. உதாஹரணமாய் ஸாது சப்தார்த்த விவரணம், கிரீடமகுட சூடாவிபாகம், 'தொழுங்காதல்' விவரணம், 'அடியேனுள்ளானுடலுள்ளான்' ப்ரகரணம், 'துஷ்யந்திச ரமந்திச' விவரணம் முதலியவற்றைக் குறிக்கலாகும். மேலும் இந்நூல் பரதூஷணமின்றி அநுபவத்தையே முதன்மையாகக் கொண்டிருத்தல் மிகப் போற்றற்கு உரித்தாகும்.

ஸ்ரீபாஷ்யகாரர் நம் ஸித்தாந்த நிர்த்தாரணத்திற்கு அருளிச்செயலை அவலம்பமாகக் கொள்ளவில்லையென்று கூறுவது நேர்மையன்று. ப்ரஹ்ம நந்த்யாதிகளுக்குப் பின் நம்மாழ்வாரையே வேதாந்த ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராக ஸ்ரீதேசிகன் அருளிச் செய்ததால் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளின் துணையின்றிப் பரிசுத்தமான நம் வேதாந்த ஸம்ப்ரதாயம் வந்திருக்க முடியாதென்பது உறுதி. மேலும் நம் ஸித்தாந்தம் சுத்தாந்த ஸித்தாந்தமானதற்கும் மூலம் அருளிச்செயலே.

எம்பெருமானர் அருளிச்செயலைப் பற்றித் தம் ஸூக்திகளில் ப்ரஸ்தாவம் செய்யாமையையும் அருளிச்செயலின் ஒரு பகுதிக்கும் உரைகாணாமையையும் அவருக்கு அதில் ஈடுபாடின்மைக்குக் காரணமாகச் சிலர் கூறுவதும் ஏற்றதன்று. ஸ்ரீபாஷ்யகாரர் காலத்திலிருந்த சூழ்நிலையைச் சரித்திரத்தின் உதவிகொண்டு நாம் ஆராயின் உண்மை விளங்கும். அப்பொழுது பாஹ்யமதத்தினரும் குத்ருஷ்டிகளும் தத்தம் மதத்தைப் பரவச்செய்ய மிக்க ஆர்வங்கொண்டு பெரும் பெருங்கலஹங்களை விளைவித்தனர். அப்பொழுது எம்பெருமானர் தம் வாழ்நாளின் பெரும் பகுதியை அவர்களுடன் வாதப்போர் நிகழ்த்தி அவர்களை ஒடுக்குவதிலும் பல்லாயிரக்கணக்கான தம் சிடர்களுக்கு ஸித்தாந்த க்ரந்தங்களைக் காலக்ஷேபம் ஸாதித்து அவர்களைக்கொண்டு ஸித்தாந்தப்ரசாரம் செய்வதிலும் செலவிட நேரிட்டது. ஆகவே அத்தகைய கிரந்தங்களில் ஆழ்வார்களைப் பற்றியோ அருளிச்செயலைப்பற்றியோ ஸ்பஷ்டமாகக் குறிப்பிடுவதற்கு வாய்ப்பில்லை. ஆயினும் ஸ்ரீபாஷ்யகாரர் தாம் அருளிச்செயலைச் சுவைத்துச் சுவைத்து அதன் கருத்துக்களைத் தம்முடைய ஒவ்வொரு ஸ்ரீஸூக்தியிலும் பொதியவைத்திருக்கும் அழகு இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தில் அதியற்புதமாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

எம்பெருமானுரை நேரில் ஸேவித்துக் காலக்ஷேபம் செய்து ஸ்வாமியின் திருக்கல்யாண குணங்களை அநுபவிக்கும் பாக்யம்பெற்ற அமுதனர் "உறுபெருஞ் செல்வமும்" என்ற ஓர் அமுதச் செய்யுளால் ஸ்வாமிக்கு ஸர்வஸ்வது ஜாதரும் அருளிச்செயலே என்று உத்கோஷித்திருக்கும்போது அதைப்பற்றி ஐயங்கொள்ளவோ ஆக்ஷேபிக்கவோ நமக்கு உரிமையில்லை; தகுதியுமில்லை. இப்படியிருந்தும் நாம் அருளிச்செயலில் எம்பெருமானருக்குள்ள ஈடுபாட்டைக் கண்ணழிக்க முற்படின், "உங்கள் பாஷ்யகாரர் ஸூத்ரத்துக்கும் கீதைக்கும் பாஷ்யமிட்டு உபநிஷத்துக்குத் தனிப்பட பாஷ்யம் இயற்றவில்லை யாதலின் அவர் உபநிஷத்துக்கு முக்கியமாகக் கருதவில்லை" யென்பாருக்கும் நமக்கும் வாசியில்லாது போம்.

ஸ்ரீமத் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி உபய வேதாந்தங்களில் தமக்குள்ள ஜ்ஞாநவிசேஷத்தையும் ஆழ்வாரிடமும் அருளிச்செயல்பாலும் உள்ள எல்லையற்ற பக்தியையும் அநுபவத்தையும் ஒன்று திரட்டி இந்நூலை இயற்றிப் படிப்பவர்களின் மனம் உருகச்செய்துள்ளா ரென்னுதல் மிகையாகாது. விவாதரூபமாய் வெளியாகும் கிரந்தங்களைக்காட்டிலும் இத்தகைய கிரந்தங்களைப் படிப்பவருக்குப் பேரின்பம் பெருகிப் புத்துணர்ச்சி நிரம்பி நிற்குமென்னுதல் சாலப் பொருந்தும்.

இவ்வாறு பெருமைபெற்ற இக்கிரந்தத்தில் கண்ணெச்சிறப்படும் என்று அஞ்சி ரஸபங்கம் வரும் ஓர் அம்சம் இதில் புகுந்துகொண்டது போலும். இந்நூலின் உயிர் நாடியென்னும்படியுள்ள, சுவை வெள்ளமிட்டோடும் "தொழுங்காதல்" விவரணப் பகுதியில் கடைசிப் பாராவும் அதற்கு முந்திய 3 வரிகளும் (பக்கம் 41) நுழைந்துகொண்டன. இது உண்மையில் த்ருஷ்டிபரிஹாரமே. 64, 65 பக்கங்களில் "யத்பதாம்போருஹ" ச்லோகத்திற்குச் செய்திருக்கிற அர்த்த விவரணபாகத்தை க்லிஷ்டகல்பநமென்று சிலர் நினைக்க நேர்ந்தாலும் மற்ற ஸகலாம்சங்களும் ரஸகநமாயுள்ளனவென்பதை யாரும் மறுக்க முடியாது.

இந்த க்ரந்தத்தால் தேறிய ஸாரமான பொருள்—இரண்டு வேதங்களையும் இருகண்களாகக் கொள்பவர் நிபுணர். அவரே உண்மை ஸ்ரீவைஷ்ணவர்—என்பதாம்.

உள்ளத்துத் தோன்றியவற்றை உள்ளவாறே அடியோம் கூறிவிட்டதற்கு மகிழவேண்டும். அல்லது அடியோமை க்ஷமிக்கவேண்டும்.

அடியவர்கள் தம்மடியான்

ஒப்பிலியப்பன் ஸந்நிதி வ. ந. ஸ்ரீரம தேசிகதாஸன், 10–10–'54.

---

**ஸ்ரீமதித்யாதி உவே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி, பாம்பே.**

த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம் பெரும் நிதியாக இன்று பெற்றேன். இது எம்பெருமானர் தாமே நேராகப் பரம கருணையோடளித்த ஆராவமுதம் என்று நினைக்கிறேன். இந்நூலை என்னுடன் கூடவிருந்து வாசித்த நண்பர்கள் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகள் நமக்கு வேண்டா; இதுவொன்று போதுமே என்று ஏககண்டமாகச் சொன்னர்கள். இதை யாரும் அதிசயோக்தியாக நினைப்பது நியாயமில்லை. செவிக்கினிய செஞ்சொல்லே ஸ்ரீபாஷ்யமாக வடிவுகொண்டதென்று காட்டுமிந்த ஸ்ரீகோசத்தையளித்த வள்ளலுக்கு 'பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ' என்ற வெறுஞ் சொல்லுடன் திசைநோக்கித் தெண்டனிட்டு நிற்கிறேன்.

தாஸன், V. V. Bombay, 2-10-'54.

---

ஸ்ரீமத் (உவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி திருக்குமாரர்)
T. விஜயராகவன், D. Phils சென்னை-7.

மஹாநிதியென்றே திருநாமம் சாத்தத்தக்க மஹாக்ரந்தம் கிடைக்கப் பெற்றேன். ஜூலை மீ 25௳ ஹிந்துபத்ரிகையில் வெளிவந்த வியாஸத்தை அன்றே வாசித்து 'ஸ்ரீவைஷ்ணவகுலத்திற் பிறந்தவர்கள் இப்படியெல்லாம் ஏதுக்கு எழுதுகிறார்களென்று நினைத்ததுண்டு; உடனே நம் ஸ்வாமியால் அம்ருத ப்ரவாஹம் கிடைக்குமென்றும் நினைத்தேன். இது ஸ்வாமி திருக்கண்களில் படுமாவென்றும் நினைத்தேன். விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேணுமென்று ஆவல்கொண்டவர்களான என்போல்வார்களுக்கேயன்றி முழுதுணர்ந்த மஹநீயர்களுக்கும் ஸ்வாமி செய்தருளும் மஹோபகாரங்களை நினைந்துநைந்துள் கரைந்துருகி நிற்குமடியேன் .

தி. விஜயராகவன், 9—10—54.

---

திருக்கோவலூர் ஸ்ரீமத். எம்பெருமானார் ஜீயர் மடாதிபதி
ஸ்ரீமத் உவே. திருவேங்கடராமாநுஜாசாரியர் ஸ்வாமி.

ஸர்வர்க்கும் ஸர்வஸ்வமேயான ஸர்வஸ்வக்ரந்தம் "கோலமாமென் சென்னிக்கு" என்கிற ரீதியிலே அடியேனுக்கு சிரோ பூஷணமாகி ஆயனார் ஸன்னிதியிலே ஒரு மஹோத்ஸவத்தை முன்னிட்டுக் குழுமிய தொண்டர் திரளிலே பலரறிய வாசித்துக்காட்டவும் பெற்றது. ஸ்ரீமந்நாத முனிகள் மூலமாக திவ்யப்ரபந்தங்கள் புநரவதாரம் செய்வதற்கு மூலமாயிருந்த ஆராவமுதே என்கிற பாசுரத்தின் திருநாமத்தையே இந்த ஸ்ரீகோசத்திற்கும் சாத்தலாமென்று ஸகல ரஸிகர்களும் கூறினார்கள். உண்மையில் இதைவிட வேறு ஆராவமுதம் இருக்கமுடியாதென்று சபதம் செய்வேனடியேன். நிரூபிக்கப்பட்ட ஒவ்வொரு விஷயமும் விலையில்லா மாணிக்க மென்னத் தகுந்ததாயிருக்க சேயும், "யத்பதாம்போருஹத்யாந" என்கிற ஆளவந்தார் தனியனுக்கு நிரூபித்திருக்கிற நிர்வாஹங்கள் ஆழ்ந்து நோக்குவாருடைய உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் விதம் எழுதி முடியாது. "பாஷ்யஞ்சேத் வ்யவருணைத் ஸ்வயம் யதிபதிர் வ்யாக்யாநவாசாம் ததா காம்பீர்யாதநவஸ்திதி:" என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திகளைப் பரம கம்பீரமென்று ஸாதித்ததன் மருமம் இப்போதுதான் விளக்கமாகிறது. அவ்வளவு கம்பீரமான ஸ்ரீஸூக்திகளின் உள்ளுறை பொருள்களைத் தெள்ளமுதென அள்ளிக் கொடுப்பதற்கு வாய்த்த வள்ளல் நம் அண்ணனே. சீலமில்லாச்சிறியேன் அதிகமெழுத அசக்தன். திருத்திப்பணிகொள்ளவேணும்.

திருவேங்கடராமாநுஜார்யதாஸன்,

திருக்கோவலூர்மடம், 7-10-54.

---

ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்திரத்நார்ணவம். இளையவில்லி. சடகோபாசாரியர்
ஸ்வாமி, ஆழ்வார்திருநகரி.

ஸர்வஸ்வ ஸம்மான ஸம்மோத ப்ரவாஹம்

"திரமிடோபநிஷத் பிரபாவ ஸர்வஸ்வம்" என்கிற அத்யத்புத திவ்யக்ரந்தம் எம்பெருமானார் தர்சனஸ்தர்களுக்கு மட்டிலுமென்ன, இவ்வுலகுக்கே ஒரு மஹத்தான

ஸர்வஸ்வலாபம். வேதாந்தத்தில் "ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்" தினால்—எதை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகிறதோ அது பொருள் என்று காட்டினபடியே இந்த 'ஸர்வஸ்வ' க்ரந்தத்திலுள்ள களை உணர்ந்தால் ஜ்ஞாதவ்யார்த்தங்கள் அத்தனையும் அறிந்ததாகவே என்கிறதை சபதமிட்டுச் சொல்லலாம். இந்த மஹத்தனம் அதஸ்கர ஹ்யமாய், கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்று நீங்காதே ப்ராஜ்ஞரோ மாய், குன்றத்திலிட்ட விளக்காய், அஜ்ஞானாந்தகாரத்தை அடியறுப்ப திகழ்கிறது. சிஷ்ய லக்ஷணபூர்த்தியுள்ளதோவென்று பரீக்ஷித்து சிக்ஷிக்க டிய அர்த்தங்களை ஸ்ரீஸ்வாமி அபேக்ஷா நிரபேக்ஷமாக வாரியிறைப்பதைக் டால் ரஹஸ்யமர்யாதைக்கு பங்கம் விளைந்தாலும் அதையும் ஸஹித்து உண்மை உணர்த்தியே தீரவேண்டிய செல்லாமை நன்கு விளங்குகிறது. க்ருபாமா ப்ரஸந்நாசார்யரென்று விருதுபெற்ற எம்பெருமானாரையும் அதிசயித்தவர் ஸ்வாமி. இம்மஹார்த்தங்கள் வெளிவரும்படி செய்து வைத்தது கொண்டு அ ஹோராத்ரம் ஸ்வாமியை சில அபிநந்தன ப்ரதாதாக்கள் புகழ்ந்து வைத்தார் எம்பெருமானார் தரிசனத்துக்கு பஹிர்ப்பூதரானவர்களில் ஒருவருடைய தூர்வா தால் இவ்வர்த்தம் வெளிவந்திருந்தால் வ்யாஜமாகிய அவரைக் கொண்டா புரோபாகிகள் மலிந்த இவ்வுலகிலே உங்கள் ராமாநுஜதர்சனஸ்தரிலேயே ஒரு திவ்யப்ரபந்தங்களின் பெருமைகளை திரஸ்கரித்திருக்கிறாரே? அதற்கு ப மென்? என்று கேட்பவர்களுக்கு இந்த ஸர்வஸ்வ க்ரந்தம் கொண்டு வாய் வித்தாலும் ரந்த்ரான்வேஷிகள் உங்கள் தர்சனஸ்தரே ஒப்புக்கொள்ளவில்லை என்று த்ருடதரபத்தமுஷ்டிகளாம்படி தௌர்ஜன்யாஸ்பதமாக்கி வைத்த பெரும்பிசகு. அந்தோ! திருக்குடந்தையில் தோன்றினவரா இந்தபிசகுக்கான

ஸ்ரீமந்நாதமுனிகள், ஆழ்வார்கள் காலத்துக்குப் பிறகு திவ்யப்ரபந்த ப்ரமுஷிதமாய் இருந்த காலத்திலே, திருக்குடந்தையில் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வாய்மொழியில் (5—8) 'ஆராவமுதே' என்று தொடங்குகிற பதிகத்தை சே கத் திருச்செவி சாத்தினார். அதில் 'குழலில் மலியச்சொன்ன ஓராயிரத் பத்தும்' என்றிருப்பதால் மற்ற பாசுரங்களையும் லபித்தல்லது தரியாதபடி தேவகான ரஸிகரானபடியாலே குழலில்மலியச்சொன்ன பாசுரத்தைப்பெற கொண்டது யுக்தமே. ஆழ்வார் தீராத ஆசையுடன் ஆராவமுதனைப் பா 'நீராய் அலைந்து' கரைந்த நிலைமைபோல இப்பாசுரங்கேட்ட நாதமுனிகளு ஈடுபாடு உண்டாய், திருக்குருகூருக்கு எழுந்தருளி, 'கண்ணிநுண் சிறுத்தா கொண்டு மனத்தனைக்கட்டி யோகத்தாலே ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து நாலா பிரபந்தமும் தர்சனரஹஸ்யார்த்தங்களும் பெற்றார். அதுவே ஓராண் வழி எம்பெருமானாரளவும் வந்து அவ்வழியாலே பஹுமுகமாகப் பிரவஹித்து வோபஜீவ்யமாயிருக்கிறது. இந்த ஐதிஹ்யம் உபயகலா சிஷ்ட கோஷ்டிக அத்யாதரத்துடன் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இதனால், திருக்குட எழுந்தருளியிருந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவமஹாநுபாவரே பக்தாமிருதமான தி பிரபந்தத்துக்கு ஊற்றுவாயாக இருந்தார் என்பது அறுதியிடப்படுகிறது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் திவ்யதேசானுபவமெல்லாம் தலைக் பரமபதத்தில் இங்கிருந்து போமவர்களை அங்குள்ளவர்கள் ஸத்கரிக்கும் காரத்தை அருளிச்செய்யுமடைவிலே (10—9—7) "குடந்தை யெங்கோவலன் யடியார்க்கே" என்று, திருக்குடந்தை ஆராவமுதனுக்கு குடிகுடி வழிவந்தாட் மவரான விண்ணுளாரிலும் சீரியர் வந்தார் என்று தோத்திரம் சொல்லி கொள்ளுகிறார்கள் என்று ஸாதித்தார். இத்தால் 'கோயிலில் வாழும் வைட் வனென்னும் வன்மை கண்டாயே' என்கிற பெருமைக்கும் மேம்பட்ட

திருக்குடந்தைவாழ் வைஷ்ணவருக்குள்ள மேன்மை. எல்லாம் லுப்தமானாலும் ஆராவமுதனைப் பற்றின திருவாய்மொழி மட்டிலும் லுப்தமாகாமல் ரக்ஷித்து வைத்திருந்தார் என்கிற பெருமைக்கு இலக்கான ஸ்ரீவைஷ்ணவர் வாழ்ந்த *செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தையிலே இன்று எம்பெருமானார் தரிசனத்திலே தோன்றி ஆசார்ய புருஷஸந்ததியிலே சிஷ்ய பரிபாலனாதி தர்சனநிர்வாஹதத்பரராய் உபயவேதாந்த ப்ரவர்த்தகரென்கிற உபாதிக்கு ஆசைப்படுகிறவராயுமிருக்கிற ஒரு அக்நிஹோத்ரி அந்தோ! ப்ரஹ்மஸ்ரீபட்டத்திற்கு இலக்கானாரே!

ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு பாஷ்யம் செய்ய உபநிஷத்துக்களிருக்கும்போது என்ன குறையென்று நினைக்கிறார் அக்நிஹோத்ரி; அந்தோ எந்த ப்ரமாணங்களும் "பிபேத்யல்பச்ருதாத்" என்கிறபடியே குத்ருஷ்டிகளிடம் சிக்கிக்கொண்டு படுகிறபாடு தெரியவில்லையா? நம் பகவத் ராமானுஜரிடத்திலும் அவை அப்பாடுதான் படுகிறதாக இவருடைய நினைவு போலும். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அண்டைகொண்ட பலத்தினாலன்றோ ஸ்வாமியின் திவ்யஸூக்திகள் வெற்றிபெற்றன. இதர பாஷ்யகாரர்கள் சருக்கி விழுந்த இடங்களையும் அங்கங்கு ஸ்வாமி ஆச்சரியமான நிர்வாஹங்கள் காட்டியிருக்குமழகையும் ஸர்வஸ்வம் கரதலாமலகமாக எடுத்துக் காட்டியிருப்பதானது நம்மவர்களுக்கு ஒரு கோடி ரூபாய் கிடைத்ததனாலுண்டாகுமானந்தத்திற்கும் மேற்பட்ட ஆனந்தத்தை விளைக்குமதல்லவா? இப்படிப்பட்ட நிரூபணங்கள் வைவஸ்வதமந்வந்தரே கலியுகே ப்ரதமபாதே ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே ஒருவரெடுத்துக்காட்டி நாம் கண்டதுண்டோ?

இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு இந்த நம் ஸ்வாமி மூலமாகவே ஒரு ஸர்வஸ்வ க்ரந்தமவதரித்தது. அது வேதாத்யயநவிஷயமாகையாலே என்போன்றவர்களுக்கு உபயோகப்படாமல் ஸலக்ஷணகநபாடிகளென்று பேர்பெற்ற மஹாமஹா வைதிகர்களுக்கு அது ஸர்வஸ்வமாகவே யிருந்ததென்பதை இன்றைக்கும் குணக்ராஹிகளான வைதிகர்கள் சொல்லக் கேட்டு வருகிறோம். அந்த ஸர்வஸ்வ மஹாப்ரதீபத்தில் சலபவ்ருத்தியை யடைந்த அக்நிஹோத்ரிகளுக்காகவே இப்போதும் இந்த ஸர்வஸ்வக்ரந்த மவதரித்தது. இதிலும் சலபவ்ருத்தியையோ சபலவ்ருத்தியையோ அடையாமல் "தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம்" என்று, …போகமுண்டுகளிப்பரேல், இதுகாறும் அபரிமிதமாகச் செய்துவைத்திருக்கிற குத்ருஷ்டிகளின் அந்நப்ராசநத்திற்கு ஒருபடி ப்ராயச்சித்தம் செய்ததாகும். அவருடைய கதி எதுவாயினுமாகுக. அதைப்பற்றி நமக்கென்ன?

"கட்டெழில் வானவர் போகமுண்பாரே" என்று ஆழ்வார் ஸாதித்த வானவர்போகம் நமக்கெல்லாம் இவ்வுலகத்திலேயே கிடைத்துவிட்டது. எம்பெருமானார் கூரத்தாழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் அனுப்ப, அவர் ஆறுமாஸம் காத்திருந்து ஒரு பாசுரத்துணுக்கைக் கொண்டுவந்ததற்கு ஸ்வாமியின் உகப்பு தலைமண்டை கொண்டதென்று இதிஹாஸம் வாசிக்கிறோம். இந்த ஸர்வஸ்வ க்ரந்தத்தில் ஸ்வாமி வாரியிறைத்திருக்கிற மஹாரத்னராசிகளை நாம் பெற்றதற்கு க்ருதக்ஞர்களாயிருப்பது தவிர வேறு என்ன செய்யப்போகிறோம்.

தாஸன் இளையவில்லி சடகோபன், 2—10—'54.

---

## ஸ்ரீமான் உவே. T. ஆராவமுது தாதாசாரியர் ஸ்வாமி, அட்வ்கேட், கள்ளக்குறிச்சி.

நாற்பது வருஷங்களுக்கு மேலாக ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸன ஸ்வாமியால் உலகுக்குக் கிடைத்துவரும் உபகாரங்கள் எண்ணுதற்கு அரியன. மாதப்பத்ரிகையாகவோ உபந்யாஸ நூல்களாகவோ வியாக்கியான க்ரந்தங்களாகவோ ஸ்வாமி வெளியிட்டுவரும் உயர்ந்த ப்ரசுரங்கள் பூர்வாசாரியர்களின் மிக்க உபகாரங்களிற் காட்டிலும் நூறுமடங்கு அதிகமானவை என்றால் ப்ரதிபக்ஷிகளும் இதை ஆக்ஷேபிக்கமாட்டார்களென்பது நிச்சயம். ஸ்வாமி செய்யுமுபகாரம் பாஷையிலா? ஸ்ரீவைஷ்ணவ வுலகில் பெரும்பான்மையாக நடையாடுகிற பாஷைகளிலெல்லாம் பத்ரிகைகளும் வியாக்கியானங்களும் வெளியிட்டு வருகிறார். இது மற்ற பேர்களுககு நெஞ்சாலும் நினைக்கக்கூடிய விஷயமாக இல்லை. நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கு மிக விரிவான திவ்யார்த்த தீபிகையுரை வெளியிட்டதோடு நில்லாமல் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் மொழிபெயர்ப்பும் வியாக்கியானமும் எழுதத்தொடங்கி ஸ்வல்பகாலத்தில் ஒரு ஆயிரம் பாசுரங்களுக்கு தெலுங்குலிபியிலும் தேவநாகரியிலுமச்சிட்டு வெளியிட்டாய் விட்டது. இந்த காரியத்தை மாத்திரம் தனியாக வொருவர்செய்ய முன்வந்தால் அவருடைய வாழ்நாள் முழுவதும் போராது என்னவேண்டும். அப்படிப்பட்ட ஒரு பெரிய காரியத்தை நம் ஸ்வாமி மற்றும் பல காரியங்களினிடையே அவலீலையாகச் செய்து வருகிறாரென்பதைப் பார்த்தால், ஸர்வேச்வரன் "ஸோகாமயத" "ஸ தபோதப்யத" என்று உபநிஷத்து ஓதுகிறபடி ஸங்கல்பமாத்ரத்தினாலேயே ஸர்வத்தையும் செய்து முடிப்பதுபோல, நம் ஸ்வாமியும் பத்ரிகாப்ரகாசநம், க்ரந்தப்ரகாசநம் என்னும்படியான ஸகல காரியங்களையும் ஸங்கல்பமாத்ரத்தாலேயே நடத்தி வருகிறாரென்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

பூர்வாசார்யர்களருளிச் செய்த ஸ்தோத்ரங்களில் ஒன்றுவிடாமல் எல்லாவற்றுக்கும் தேசிக ஸ்தோத்ரங்களுக்குமுட்பட சிறந்த வியாக்கியானங்களை யாவரும் செய்து வெளியிட்டிருக்கிற காரியமும் மற்றொருவர்க்கு நெஞ்சாலும் நினைக்க முடியாதது.

சிலமாத காலமாக ஸ்வாமி தமது ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை வாயிலாக ஸ்ரீமத் வால்மீகி ராமாயணவசனம் வெளியிட்டு வருகிறார்; ஸுந்தரகாண்டம்வரை முடிந்து வெளியாகிவிட்டது. அந்த நடையைப்பார்க்கிற லௌகிக வைதிக விவேகிகள் யாவரும் 'இது அதிமாநுஷமாயிருக்கின்றதே' என்றுதான் சொல்லுகிறார்கள். இப்படி எந்த ப்ரசுரத்தைப் பார்த்தாலும் அதிமாநுஷமாகத்தான் காண்கிறது. 1951 ஆம் வருஷத்தில் ஸ்வாமிக்கு ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடந்தபோது மதராஸ் பெருங்கூட்டத்தில் ஒருநாள் தலைமைதாங்கிய ஹைகோர்ட்டு சீப் ஜட்ஜ் கனம். ராஜமன்னாரவர்கள் பேசினதாவது—நம் ஸ்வாமி இதுவரையில் முந்நூறு க்ரந்தங்களுக்குமேல் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது; அந்த க்ரந்தங்களையெல்லாம் ஒருபிரதி நான் வரவழைத்துப் புத்தகவுருவத்தை மாத்திரம் பார்க்கிறது; அப்படி பார்க்கும்போது புத்திக்கு அடியோடு ச்ரமம் கொடாமல் ஒரு புஸ்தகம் பார்த்துக் காபியெழுதுவதில் கைதேர்ந்தவர்களில் ஒருவர் தம்முடைய வாழ்நாள் முழுவதிலும் இவ்வளவையும் காபிபண்ணுவதாகிற காரியத்தையாவது செய்து முடிப்பரா?' என்பதே என்மனதில் தோன்றிற்று என்றார். அந்த மஹாஸபையில் எல்லாரும் இப்படிப்பட்ட ஆலோசனை தோன்றியதைப்பற்றி அப்போது ஸபையில் எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். உண்மையில் ஸ்வாமியின் வெளியீடுகளைப் பார்ப்பவர்

'இவர் ஒருநாளைக்கு 500 ஸைட் எழுதுவரா? 600 ஸைட் எழுதுவரா?' என்று மதிப்பிடுகிறார்களேயொழிய 50, 60 ஸைட் என்கிற மதிப்பு ஒருவருடைய புத்தியிலும் தோன்றுவதில்லை. இது தவிர, நாற்றிசையிலுமுள்ளவர்களும் தினப்படியாக ஸ்வாமிக்கு எழுதுகிற கடிதங்களுக்கெல்லாம், பிரதிநிதியொருவரையும் வைத்துக் கொள்ளாமல் தம் கையினாலேயே எழுதுகிற பதில் கடிதங்களைப்பற்றி மதிப்பிடத் தொடங்கினாலோ அது ஒரு கணக்கிலுமடங்காது. அடியேனுக்கு ஸ்வாமியோடு அடிக்கடி கலந்துபழக ஸந்தர்ப்பம் வாய்ப்பதனால் இவ்விஷயங்களையெல்லாம் அடியேன் தவிர வேறுயாரும் தெரிந்து கொள்ளவும் தெரிவிக்கவும் முடியாது.

இனி ப்ரக்ருத விஷயம் பற்றிப் பேசுகிறேன். ஸ்ரீஸ்வாமியால் இப்போதே அச்சிடப்பட்டு முடிக்கப்பட்டதும் இன்னமும் வெளியிடப்படாததுமான த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வமென்கிற க்ரந்தத்தை இந்த நவராத்ரியில் அனேகமாக நித்யபாராயணம் செய்யப்பெற்றேன். இதைப்பற்றி அடியேன் விரிவாக என்ன எழுதப்போகிறேன். உபயவேதாந்தங்களிலும் பரிபூர்ணாதிகாரிகளாக ஆங்காங்கு பல மஹான்கள் இல்லாமற் போகவில்லை; அவர்களில் யாரேனுமொருவர் இந்நூலிலுள்ள விஷயங்களையெல்லாம் க்ரஹித்து தரித்துக்கொண்டு எடுத்துரைக்கக் கூடியவருண்டாவென்று அடியேனுள்ளம் விமர்சிக்கத்தொடங்கியது. இப்படி அடியேன் எழுதுவது மஹத்தான பாகவதாபசாரத்தில் பர்யவஸிக்குமோ? என்றும் அஞ்சுகிறேன். அடியேன்கொண்ட ஆநந்தாதிசயமும் விஸ்மயமுமே இப்படியெழுதப் பண்ணினதாகக் கொள்வது நலம். வஸ்துஸ்திதியில் மிகவும் ஆழ்ந்த ஆராய்ச்சிகள். எதிரிகளுங்கூட ஒன்றிலும் ஒருவிதமான எதிர்வாதமும் செய்ய முடியாதபடி ஒவ்வோரெழுத்தும் ஆணித்தரமானது.

பிடிவாதமாக ஏதாவது எதிர்வாதம் பண்ண வேணுமென்று தோன்றினால், "காடகச்ருதியிலும் தைத்திரீயோபநிஷத்திலும் திவ்யப்ரபந்தங்களை ப்ரசம்ஸித்திருப்பதாக ஒரு அதிகாரம் எழுதியிருக்கிறாரே, இது அப்படித்தானோ?" என்று க்ஷேபிக்கலாமே தவிர, மற்று எந்த விஷயத்திலும் அணுவளவாவது வாயைத் திறக்கமுடியுமோ? திருவாய்மொழியைப்பற்றின ப்ரசம்ஸை வேதத்தில் இருந்துதீர வேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? இருக்கவுமாம், இல்லையாகவுமாம். பகவத் பாஷ்யகாரர் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில்கண்ட அர்த்தவிசேஷங்களையே தம்முடைய பாஷ்யாதிகளில் நன்கு பதிய வைத்திருக்கிறார் என்பதை நிரூபிப்பதொன்றே இந்நூலுக்கு முக்கியமான நோக்கென்று முகப்பிலேயுள்ளது. அது மற்றொருவருடைய புத்திக்கு கோசரமாகாத முறையிலும் அசைக்க முடியாதவகையிலும், 'எம்பெருமானாருக்கும் அண்ணாஸ்வாமிக்குமேதான் இது தெரியும்' என்றுகூட சொல்லும்படிக்கும் இதில் அமைந்து விட்டது. இதற்கு "அஸ்மதாசார்ய ஹ்ருதயம்" என்று திருநாமம் சாற்றியிருந்தால் மிகப் பொருத்தமாயிருக்கும்.

ஸ்ரீவைஷ்ணவ குலத்திலேயே பிறந்தவொருவர் தம்முடைய நிலைமைக்கு அடியோடு தகாத முறையில் எழுதியிருந்த வொரு வியாஸத்திற்குக் கண்டனமாக அவதரித்த இந்த க்ரந்தத்தில், அந்த ஸ்வாமியின் பெயரைக்கூடத் தொடாமலும், கடுஞ்சொல் ஒன்றுகூட புகாமலும் மிகவுயர்ந்த க்ராந்திகஸரணியில் உபபாதனங்கள் காணப்படுவது மிகவும் குலாவிக் குறிப்பிடத்தக்க விசேஷம்.

தாஸன் T. A. தாதாசாரியன், 1—10—54.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம: ஸ்ரீமத் வாநாசலமஹாமுநயே நம:



## ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய

### (27-ஆம் பட்டத்தில் அமர்ந்து விளங்கும்)

# ஸ்ரீமத் வானமாமலை ஸ்வாமியின்

## திருவருளே திருவுருக்கொண்ட திருமுகம்

நம் அண்ணங்கராசார்யருடைய த்ரமிடோப நிஷத் ப்ர பாவ ஸர்வஸ்வக்ரந்தத்தை ஆமூலாக்ரம் வாசித்துப் பார்க்க வாய்த் தது. ஸர்வாங்க ரமணீயமான இந்த க்ரந்தத்தைக் காணும்போது "அநாக்ராதாவத்யம் பஹுகுண பரீணாஹி மநஸோ திஹாநம் ஸௌஹார்தம் பரிசிதமிவா தாபி கஹநம், பதாநாம் ஸௌப் ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியே ப்ரதிபதம் நினைவுக்குவந்தது. இந்த ச்லோகத்தி லுள்ள ஒவ்வொரு விசேஷணமும் இந்த ஸர்வஸ்வக்ரந்தத்திற் குப் பொருத்தமானதென்று உள்ளபடி தோன்றிற்று. இக்காலத் திற்கு இந்த க்ரந்தம் மிகவும் ஆவச்யகம். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மாத்திரமேயன்றிக்கே ஸகல மதஸ்தர்களுக்கும் தத்வார்த்த ப்ரகாச ஹேதுவான இந்த க்ரந்தத்தினால் மஹோபகாரம் செய்திருக்கிற நம் அண்ணங்கராசார்யருக்கு நாம் மனப்பூர்வமாக மங்களா சாஸநம் செய்கிறோம். இப்படிப்பட்ட க்ரந்தங்கள் இவ்விருள் தருமா ஞாலத்திற்கு அணி விளக்காக அடிக்கடி தோன்றவேணும்.

**ஸ்ரீராமாநுஜன்**
(முகாம்) திருவல்லிக்கேணி வானமாமலைமடம்.
ஜய ஹூ புரட்டாசி மீ ரோஹிணி

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசார்யர் எழுதிய

# த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்

ஆளவந்தார்முதலான நம் பூர்வாசார்யர்களும், விசேஷித்து ஸ்ரீபாஷ்யகாரரும் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களையுபஜீவித்து திவ்ய ஸ்ரீஸூக்திகளருளிச் செய்திருக்கிறபடியை வெகுவிரிவாக நிரூபிப்பது.

## ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

திருக்குடந்தை 112, கீழக்கடலங்குடியில் வாழும்
ஸ்ரீமான், ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்காரால்

சென்னை, ரத்தினம் பிரஸ் பிராஞ்சில் அச்சிடுவிக்கப்பட்டது

கிடைக்குமிடம் :

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

மேலேகண்ட திருக்குடந்தை விலாஸத்திலும் கிடைக்கும்

விலை ரூ. 1—8—0

ஜயஹூ புரட்டாசித் திருவோணம்

1954

# இந்நூலிலுள்ள விஷயங்களின் அட்டவணை

பக்கம்

1. பகவத்பாஷ்யகாரரும் திவ்யப்ரபந்தமும். [பாஷ்யகாரர் த்ராவிட வேதாத்மக திவ்யப்ரபந்த பரிபோஷண நிரதர் என்பதைப் பல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளால் நிரூபித்தல் ] ... 2
2. தேசிகனும் திவ்யப்ரபந்தமும். [திவ்யப்ரபந்தங்கள்கொண்டே வேதார்த்த நிர்ணயம் பண்ணவேண்டியதான பெருமையை தேசிக திவ்யஸூக்திகளைக்கொண்டு நிரூபித்தல்.] ... 7
3. திவ்யப்ரபந்தத்தை வேதமும் வேதோபப்ரும்ஹணங்களும் கொண்டாடியிருப்பது. [வேதத்திலும் விசிஷ்ய தைத்திரீயோபநிஷத்திலும் உபப்ரும்ஹணங்களிலும் திவ்யப்ரபந்த ப்ரசம்ஸை யிருக்கும்படியை ஸப்ரமாணமாக நிரூபித்தல்.] ... 10
4. பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்தி வைலக்ஷண்யம். [ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் ஆழ்வார் பாசுரங்களையடியொற்றியே அவதரித்திருக்கின்றன வென்பதைப் பொதுவாகச் சில பாஷ்ய ஸூக்திகளைக்கொண்டு நிரூபித்தல்.] ... 15
5. ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளில் விசேஷாவதானம். [மேல் விவரிக்கப்போகிற விஷயங்களுக்கு இது அவதாரிகா ரூபம்.] ... 18
6. நம்மவர்களின் உபய வேதாந்தாசார்யத்வம். ... 20
7. ஸ்வாமி செய்தருளிய ஸாது சப்தார்த்த விவரணம். [*பரித்ராணாய ஸாதூநாம்* என்றவிடத்து கீதா பாஷ்யத்திலே ஆழ்வார்களையே ஸாது சப்தார்த்தமாக விவரித்தருளியிருப்பதை நன்கு நிரூபித்தல்.]... 23
8. அநந்தகுண ஸாகர ஸூக்தியும் ஆழ்வாரருளிச் செயலும். [இது முதல், ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திகள் திவ்யப்ரபந்தங்களை யுட்கொண்டே அவதரித்தவை யென்பதை ஸ்ரீபாஷ்யாதி ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக் காட்டி நிரூபிக்கிறது. அவற்றில் இது வொன்று.] ... 25
9. கப்யாஸச்ருதியின் பொருளும் அருளிச் செயலும். [*கப்யாஸச்ருதிக்கு ஸ்வாமி ஆதரித்த அர்த்தங்கள் மூன்றும் திவ்யப்ரபந்த மூலகங்களே யென்று நன்கு விவரித்துக் காட்டுதல்.] ... 2
10. புண்டரீகதளாமலாயதேக்ஷணதத்வம். [*கப்யாஸ ச்ருதியில் 'புண்டரீக மேவமக்ஷிணீ' என்றதற்கு ஸ்வாமி ஸாதித்த அதிகப்படியான அர்த்தங்களும் திவ்யப்ரபந்தமூலகங்களேயென்று நிரூபித்தல்.] ... 3
11. ஸ்ரீரங்ககத்ய ஸ்ரீஸூக்தியும் திருவாய்மொழியும். ['ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திபேதம்' என்கிற ஸ்வாமி ஸூக்திக்கு திருவாய்மொழியே அடியென்று நிரூபித்தல் ] ...
12. கிரீடமகுட சூடாவதம்ஸமும் ஆழ்வாரருளிச் செயலும். ["கிரீடமகுட சூடாவதம்ஸ" என்கிற ஸ்வாமி ஸூக்திக்கு ஆழ்வார் பாசுரமே நிதாநமென்று நிரூபித்தல்.] ...
13. ஸ்ரீபாஷ்யத்தில் ஓர் அருமையான விஷயம். [எம்பெருமான் எப்படிப்பட்ட காரியங்களையும் ஸங்கல்பத்தினாலேயே செய்து தலைக்கட்ட வல்லவனாயிருக்க நேரேவந்து அவதாரங்கள் செய்வது எதற்காக வென்பதை ஸ்வாமி திருவாய்மொழியைக்கொண்டே நிஷ்கர்ஷித்தமையை விசதமாக நிரூபித்தல்.] ...

பக்கம்

14. **திருப்பாவையை யநுஸரித்த கீதாபாஷ்யம்.** [கீதையில் *ஸ யத்ப்ரமாணம் குருதே* என்றவிடத்தில் ஸ்வாமியின் பாஷ்யம் திருப்பாவைப் பாசுரத்தையே யடியொற்றியதென்று நிரூபித்தல்.] ... 41

15. **அருளிச்செயலையே அடியொற்றிய சதுர்விதாதிகாரி விவரணம்.** [கீதையில் *ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ* என்னப்பட்ட சதுர்விதாதிகாரிகளின் ஸ்வரூபத்தை ஸ்வாமி விவரித்திருப்பது திவ்யப்ரபந்தைக மூலகமென்று நிரூபித்தல்.] ... 43

16. **ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமோபஸம்ஹாரங்கள்.** [ஸ்ரீபாஷ்யத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் திவ்யப்ரபந்தார்த்த விசேஷங்களும் ஆழ்வாருடைய ப்ரசம்ஸையுமிருக்கும்படியைப் பரக்க நிரூபித்தல்.] ... 44

17. **வாஸுதேவஸ்ஸர்வமும் ஆழ்வார் நினைவைப் பின்சென்ற கீதாபாஷ்யமும்.** [கீதையில் *வாஸுதேவஸ்ஸர்வ மென்றவிடத்திற்கு சங்கர பாஷ்யத்தைக்கண்டித்து ஸ்வாமியின் பாஷ்ய மவதரித்தது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை யாதரித்தே யென்பதை நிரூபித்தல்.] ... 51

18. **ஜீவாத்மாவின் அந்தரங்க நிரூபகத்தை பாஷ்யகாரர் நிர்ணயித்தது திருவாய்மொழிகொண்டே.** [ஸ்வாமி ஆழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே யனுப்பி மஹாநிதியாக லபித்த மஹார்த்தத்தை கீதாபாஷ்யத்தில்பலவிடங்களில் பதியவைத்திருப்பது காட்டுதல்.] ... 53

19. **சரணாகதிகத்யத்தில் அருமையான விஷயமொன்று.** ['நிகரில் புகழாய்' என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி ஆதரித்தருளின விதம்.] ... 56

20. **துஷ்யந்தி ச ரமந்தி ச—திவ்யப்ரபந்தார்த்த விசேஷம்**—[கீதையில் *மச்சித்தா மத்கதப்ராணா:* என்ற ச்லோகத்திற்கு ஸ்வாமி பாஷ்யம் திருமழிசைப்பிரானருளிச் செயலையடியொற்றியதென்று நிரூபிப்பது].... 57

21. **கீதாபாஷ்யத்தின் ஸாரம்**—[கீதையில் * தேஷாம் ஸததயுக்தாநாம் * ச்லோகத்தின் பாஷ்யம் திருவாய்மொழியையநுஸரித்ததென்பது.] .... 59

22. **திருவாய்மொழியே வடிவெடுத்த ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம்.** [*ஸர்வதாநுபபத்த்யதிகரண பாஷ்யம்முழுதும் திருவாய்மொழியிற் பாசுரமொன்றை யடியொற்றியே யவதரித்ததென்று நிரூபித்தல்] ... 59

23. **நித்யக்ரந்தத்தில் நிதியான ஸூக்தியொன்று.** [பகவதாராதனத்தில் திவ்யப்ரபந்த ஸேவையை ஸ்வாமி நித்யக்ரந்தத்தில் நியமித்தருளியிருப்பதை நிரூபித்தல்.] ... 62

24. **பகவத்ராமாநுஜ ஸ்ரீஸூக்திசைலி.** [எதையும் நுட்பமாகக் கண்டறியும்படியாகவே அருளிச்செய்வது ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி ஸரணியென்பதை *யத்பதாம்போருஹ ச்லோக நிதர்சந பூர்வகமாக நிரூபிப்பது]... 63

25. **ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த நிர்ணயமும் திவ்யப்ரபந்தத்திலிருந்தே.** [விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு உள்ளீடான அர்த்தங்களை ஸ்வாமி திவ்யப்ரபந்தங்கொண்டே நிர்ணயித்தருளினரென்று நிரூபித்தல்]... 66

26. **ஆளவந்தாரும் ஆழ்வார்களும்.** [ஆளவந்தார் ஸூக்திகளிலாராய்ச்சி]. 68

27. **ஆழ்வானும் ஆழ்வாரும்.** [கூரத்தாழ்வான் ஸூக்திகளிலாராய்ச்சி.]... 70

28. **பட்டரும் ஆழ்வார்களும்.** [பட்டர் ஸ்ரீஸூக்திகளிலாராய்ச்சி.] ... 75

29. **உபஸம்ஹாரம்.** .... 78

---

ஸ்ரீ:

# முன்னுரை

## (ஸ்ரீமான் ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்கார், கும்பகோணம்.)

திருக்குடந்தையில் வாழும் ப்ரஹ்மஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமாநுஜா
சாரியாரவர்கள் சென்ற ஜூலை மாதம் 25உ ஞாயிற்றுக்கிழமை வெளி
ஹிண்டு தினசரிபத்திரிகையில், ஆழ்வார் திருவடிகளில் பக்தியே வடிவெடுத்தவ
ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார் (சென்னை அட்வொகேட்) அவர்க
நம்மாழ்வார் திவ்யப்ரபந்த விஷயமான சிறு நூலொன்றுக்கு மதிப்புரை யெ
கையில் அந்த நூலாசிரியருக்கு ஆழ்வார் திருவடிகளிலிருக்கும் பக்தியைப் பா
யெழுதிவிட்டு அநாவச்யகமாகவும் உண்மைக்கு மாறாகவும் சில விஷயங்கள் எ
யிருந்தார்; (அதாவது) திவ்யப்ரபந்தம் வேதங்களைவிட உத்க்ருஷ்டமென்
இதுவும் ஒரு வேதமென்றே சொல்லுவது தவறானதென்றும், ஸ்ரீராமாநுஜர் இ
தமிழ்ப்ரபந்தங்களை ஆதரிக்கவில்லை யென்றும், அவர் வடமொழி உபந
நிஷத்துக்களைத் துணைகொண்டு ஸ்ரீபாஷ்யாதிகளைச் செய்தாரேயொழிய திவ்ய
தங்களைத் துணைகொள்ளவேயில்லை யென்றும் எழுதியிருந்தார். இது ஸ்ரீபா
பகவத் விஷயாதி க்ரந்தங்களில் லவலேசமும் பரிசயமில்லாதவர்கள் எழுதக்கூ
டேயல்லது அவற்றில் சிறிதாவது பரிசயமிருந்தால் இப்படியெழுதக் கைவந்தி
தென்று அப்போதே பல மஹான்கள் ஸாதித்தார்கள். உண்மையில் அக்
ஹோத்ரம் தாதாசாரியார் பரம்பரையில் பகவத் விஷயத்திற்போலவே ஸ்ரீபா
யாதிகளிலும் ப்ரவேசபாக்ய மில்லாமையாலே அவர் எழுதியிருப்பதில் வி
பொன்றுமில்லை யென்றும் பல பெரியார்கள் பணித்தார்கள்.

1-8-1954 ஞாயிற்றுக்கிழமையன்று வெளிவந்த ஹிண்டுவில் ஸ்ரீமா
M. V. V. K. ரங்காசாரியார் என்னுமொருவர் தாதாசாரியாருடைய வியாஸத்
மறுத்து மிகவும் சுருக்கமாக ஒரு லெட்டர் வெளியிட்டிருந்தாலும், உபய வேதா
தங்களையும் கரைகண்ட மஹாபுருஷர்கள் மூலமாக ஒரு சிறந்த க்ரந்தம் வெ
வேணுமென்கிற ஆவல் அடியேனுக்கு அபரிமிதமாக இருந்தது. "பாஷ்யகா
இதுகொண்டு ஸூத்ரவாக்யங்க ளொருங்கவிடுவர்" என்று ஆசார்யஹ்ருதய
லும், "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநில
தெளிகின்றோமே" என்று தேசிகப் பிரபந்தத்திலும் இருந்தாலும், அதை நன்
ஸமந்வயப்படுத்திக் காட்டவேணும்; ஒன்றிரண்டு விஷயங்களிற் காட்டின
போதாது; பல விஷயங்களில் வித்வான்கள் சிறிதும் விவாதப்படாமல் உக
ஏற்றுக்கொள்ளும்படி காட்டவேணும். இதற்குத் தகுந்த உத்தமாதிகாரி
மஹாபுருஷர் உலகம்பரந்த புகழாளரான காஞ்சீபுரம் ஸ்ரீஸ்வாமி யொருவரே
லால் அந்த ஸ்வாமி திருவடிவாரத்திலே அடியேன் பிரார்த்தித்தேன்; பிரார்த்த
வேளை மிக நல்லதாயிருந்தபடியால் அடியேனுடைய வேண்டுகோள் வெறு
வாக நிறைவேறினது மல்லாமல் சதாதிகமாகவும் நிறைவேறிற்று. ஸ்ரீமத் ப
வாதிபயங்கர ஸ்வாமி த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ மென்னுமிந்த ம
க்ரந்தத்தை ஒரு வாரத்தில் ஸித்தப்படுத்தி யுபகரித் தருளினார். இதில் சிற்சில
யங்களை அடியேன் ஸ்வாமியினுடைய பத்ரிகையான ஸ்ரீராமாநுஜனிலும், அ
லஹரியிலும் ஏற்கெனவே ஸேவித்திருந்தாலும் அனேகமான அபூர்வ விஷய
கொண்டு இந்த மஹாக்ரந்தம் அமைந்திருக்குமழகு அடியேன்போன்ற ம
களுக்கு நிலமன்றாகையாலே, உபயவேதாந்த ஸாகரபாரதர்சிகளான வித்வா
கள் இதையநுபவித்து ஆனந்திக்கவேணுமென்று கருதி அடியேன் இதை மு
ணம் செய்துவைக்கும் பாக்யம் பெற்றேன். இதனால் அடியேனை மிகவும்
ஜந்மாவாகவெண்ணிப் பரமானந்தமடைகின்றேன். இந்த க்ரந்தத்தை ஒரு
விடாமல் வாசிப்பவர்களுக்கு ஆளவந்தார், கூரத்தாழ்வான் பட்டர்முதலான ஆ
யர்களைக்காட்டிலும் ஸ்ரீபாஷ்யகாரரே திவ்யப்ரபந்தங்களை மிக அதிகமாக உ
கங்கொண்டவரென்கிற உண்மை தெரிவதோடு, உபயவேதாந்த ரஹஸ்யா
களெல்லாம் கையிலங்கு கனியாகுமென்பது அடியேனது துணிபு. S. ரங்கஸ்

ஸ்ரீமதுபயவே. வித்வத்ஸார்வபௌம.

## ஆஸூரி ராமாநுஜாசார்ய ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர்.



உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய சப்தத்திற்கு அத்விதீயலக்ஷ்ய பூமியாக ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீஸ்வாமி திருவடி வாரத்தில் இந்த ஸர்வஸ்வத்தை ஸமர்ப்பிக்கிறேன்.

# அடியேனுடைய அபரிமிதானந்தம்.

(ஸ்ரீமான் உவே. C. R. ராமஸ்வாமி ஐயங்கார், B.A., B.L., ஸேவாநிவாஸம், தோப்பு...

ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்தில் தோன்றிய யாவர்க்கும் நாம் உவே. என்று உபயவே. என்றும் எழுதிக்கொண்டிருந்தாலும் அந்த ஸங்கேதச் சொல்... அர்த்தமான உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யத்வம் ஆங்காங்கு சிலசில மஹா... களுக்குப் பொருந்தலாமென்று இதுவரை அடியேன் எண்ணியிருந்தேன். இப்... போது இந்த ஸர்வஸ்வமஹாக்ரந்தத்தை ஸேவித்த பின்பு அந்த உபயவேதா... ப்ரவர்த்தகாசார்யத்வம் அசேஷஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்குள் ஸ்ரீமத்ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியொருவருக்கே அஸாதாரணமென்று சபதம் பண்ணிச் சொல்... கிறேன். இந்த மிகச்சிறந்த மஹாக்ரந்தத்தை நாலைந்துமுறை வெகு ஊக்கத் துடன் பாராயணம் செய்தேன். ஸ்ரீபாஷ்யகாரருடைய திவ்யஸூக்திகளுக்கும் ஆழ்வாரருளிச் செயல்களுக்கும் வெகு பொருத்தமாக நிரூபித்துக் காட்டியிருக்கு... ஸமந்வயம் அந்த பகவத் ராமாநுஜரே மறுபடியும் நம்ஸ்வாமிரூபேண அவதரித்து காட்டினதாக நினைக்கக்கூடியதாயிருக்கிறதேயொழிய வேறில்லை.

ஸமந்வயம் காட்டுகிறவர்கள் பெரும்பாலும் ஏறிட்டுக் காட்டுவதாகவே நினைக்க நேருவதுண்டு; இதில் ஒரு சிறு அம்சம்கூட ஏறிட்டுக்காட்டுவதாக நெஞ்சி லும் நினைக்க முடியாதபடி ஸ்வச்சமாகக் காட்டப்பட்டிருக்குமழகு அவரவர்கள் அநுபவித்தே அறியத்தக்கது. “போத்தாரோ மத்ஸரக்ராஸ்தா:” என்கிற ஸுபாஷிதத் திற்குத் தப்பிப்பிழைத்த வித்வான்கள் மிகச்சிலரே; அவர்களாவது இந்த... நித்யபாராயணத்தில் வைத்துக்கொண்டால் அவர்களுடைய ஞானம் விசேஷமாய் பரிமளிக்குமென்பது அடியேனுடைய துணிபு.

தாஸன். C. R. ராமஸ்வாமி, 20—9—54

---

# அடியேன் செய்யும் விண்ணப்பம்.

(ஸ்ரீமான். ராவ்பஹதூர், மரீஷிமாந்ய, R. நரஸிம்மய்யங்கார் ஸ்வாமி, மதுரை)

இவ்வுலகில் நாம் சோறு உண்கிறோமென்றும் விண்ணுலகில் அமரர் அமுதமுண்கிறார்களென்றும் ஸாமான்யமாகச் சொல்லுவதுண்டு. ஸ்ரீ காஞ்சீ ப்ரதி வாதிபயங்கரம் ஸ்வாமி மூலமாக நாற்பது வருஷகாலமாய் மாதந்தோறும் பக்ஷந் தோறும் வாரந்தோறும் நாள்தோறும் வெளிவருகின்ற வியாக்கியானங்களையும் பத்திரிகைகளையும் இடைவீடின்றி அநுபவிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் அமுதமுண்பவர்களென்று அடியேன் உறுதி கூறுவேன். இப்போது கிடைத் திருக்கிற ஸர்வஸ்வமென்கிற அம்ருதம் அடியேனுடைய ஜீவித சேஷத்திற்கு யாநுபவத்திற்கு நிதி போன்றதென்று அந்தரங்கம் நினைக்கிறது. ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு மஹானிடத்தில் நாம் நன்றி பாராட்ட நேருகின்றது. ... சமயம் திருக்குடந்தை அக்நி ஹோத்ரம் ஸ்வாமியிடத்தில் ஹ்ருதயபூர்வகமான நன்றியைச் செலுத்த ஸ்ரீவைஷ்ணவலோகம் முழுவதும் கடமைப்பட்டிருக்கின்றது.

தாஸன். R. நரஸிம்ஹன், மதுரை, 22—9—54

---

## ஸ்ரீமான் உ. வே. S. S. P. ராகவாசாரியர் ஸ்வாமி

(அட்வகேட். திருநெல்வேலி)



அடியேன் செய்யும் விண்ணப்பம். ஸ்ரீமான் கும்பகோணம் அக்நிஹோத்ரம் ராமாநுஜதாதாசார் ஸ்வாமி 25—7—'54 ஹிண்டுவில் வெளியிட்டவொரு மதிப்புரையில், திவ்யப்ரபந்தம் வேதமுமல்ல, வேதத்தை விட சிறந்ததுமல்ல, ஸ்ரீபாஷ்யகாரர் ஆதரித்ததுமல்ல என்றெழுதியிருந்ததைப் பார்த்ததும் அடியேனுக்கு அஸஹ்யமான வருத்தமுண்டாயிற்று. உண்மையில் மிகவும் அருந்துதமாக இருந்தது. ஸ்ரீவைஷ்ணவ ஸந்ததியில், அதிலும் ஸ்ரீமந்நாத முனிகளின் ? வம்சத்தில் பிறந்து அக்ஷராஸ்யருமானவிவர் இப்படி துரபிப்ராயங் கொண்டது மல்லாமல் அதை உலகறிய வெளியிட்டதும்பற்றி மிகவும் துக்கப்பட்டேன். ஸ்ரீபாஷ்யகாரர் ஸாதித்த திவ்ய ஸூக்திகளில் திவ்ய ப்ரபந்தங்களைப் பற்றின ப்ரசம்ஸை இல்லையே, இதற்கு என்ன காரணம்? என்று சிலர் சர்ச்சிப்பதுண்டு. அதற்கு, உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த ப்ரவேசமுடைய மஹாமதிகள் த்ருப்திகரமான ஸமாதானங்கள் ஸாதிப்பதுண்டு. ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களாயிருப்பவர்கள் அப்படி உபய வேதாந்த ஸாமரஸ்யத்தை அழகாக உபபாதித்துக் காட்டி லோக ரஞ்ஜநம் செய்ய வேண்டியிருக்க, அது செய்யாததோடு விபரீத ப்ரசாரமும் செய்யத் துணிந்தெழுந்தது அடியேன் போல்வார்க்கு அத்யந்த சோசநீயமே.

ஆனாலும் அவருடைய ப்ரவ்ருத்தி ஒருவிதத்தில் பரமானந்த ஸந்தோஷ ஸந்தாயகமாகவே முடிந்ததென்று உகக்கலாம். ஜகத்விக்யாத விமல வைதுஷ்யரான ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி இதுவரையில் பல பாஷைகளில் பல நூற்றுக் கணக்கான உயர்ந்த க்ரந்தங்களை ஸாதித்திருந்தாலும் இப்போது ஸாதித்திருக்கிற இந்த த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்போல் ஒரு க்ரந்தமும் அமையவில்லை. இதை அநுபவிக்க அநுபவிக்க "அண்ணிக்குமமுதூறு மென்னாவுக்கே" என்று சொல்லவேண்டியிருக்கிறதே யொழிய உண்மையில் வேறொன்றுமே சொல்லத் தெரியவில்லை. இப்படிப்பட்ட நிதியான மஹாக்ரந்தம் அவதரிப்பதற்கு பீஜபூதரான அக்நிஹோத்ரம் ஸ்வாமியிடத்திலே நாம் முக்யமாக க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ண ப்ராப்தம்.

இந்த ஸர்வஸ்வக்ரந்தத்தை ஸ்ரீவைஷ்ணவவுலகம் ஸர்வஸ்வமாகவே கொள்ளத்தகும். மதாந்தரஸ்தர்களும் இந்த மஹாக்ரந்தத்தை ஒரு ஆசார்யமுகேந அதிகரித்தால் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் உபயவேதாந்த ப்ரவர்த்தகத்வம் இப்படிப்பட்டதன்றோவென்று உகந்து இந்த ஸம்ப்ரதாயத்தில் மிகவும் ஈடுபாடு கொள்ளுவர்களென்பதில் ஸந்தேஹ கந்தமுமில்லை.

அடியேன் ராகவதாஸன், திருநெல்வேலி 25—9—'54.

---

## ஸ்ரீமான் உவே. சென்னை அட்வகேட் D. ராமஸ்வாமி ஐயங்காருடைய கடிதம்

Septr. 16/1954.

D. Ramaswamy,
Advocate, Vepery, Madras-7.

To Sriman P. B. Annangarachariar Swami, Kancheepuram.

My dear Swami,

Namo Namaha,

I duly received your letter.........I am eagerly awaiting your publication. I shall enjoy all nice sentiments, ideas and thoughts that you happen to put into the book.

I hope your proposed book will demonstrate to what great extent Ramanuja derived his inspiration from the Divya Prabandhas and especially from Tiruvoimozhi.

With Pranamas,

Yours ever,
(Sd.) D. Ramaswamy.

---

## அச்சுப்பிழைகளைப்பற்றின குறிப்பு

வெகு ஜாக்ரதையுடன் திருத்தினாலும் அச்சுப் பிழைகள் புகுவது அச்சுக்கூடங்களின் இயல்பாதலால் இந்நூலிலும் சில பிழைகள் புகுந்தன. ஆனால் விவக்ஷிதார்த்தத்தைத் தோற்றுவிக்கும்படியான பிழை ஒன்றுகூட புகவில்லை. சில எழுத்துக்கள் இடம் மாறிவிழுந்தும், சில எழுத்துக்கள் மைபடியாமலுமிருப்பதல்லாமல் வேறு விதமான பிழை நமது கண்ணுக்குப் புலப்படவில்லை. ஸ்வல்பமாகவுள்ள பிழைகளை எளிதாகத் திருத்திக்கொண்டு வாசிப்பர்களென்பது நமது நம்பிக்கை.

—பதிப்பாளர்

ஸ்ரீ:

# விஜ்ஞாபனம்.

(ஸ்ரீஉவே: வித்வான். அக்காரக்கனி. ஸம்பத்குமாராசாரியர், M.A.)

தத்வஹிதபுருஷார்த்தங்களை யுபதேசிக்கவே அவதரித்த வேதமானது அவை
களை இப்படிப்பட்டவையென்று நாம் எளிதில் தெரிந்து கொள்ளும்படி அவதரிக்க
வில்லை. அறிவிலிகள் இவையெல்லாம் உந்மத்தபாஷிதங்களேயென்று ஏசும்படி
யன்றோ வேதம் பேசியிருக்கிறது. அதாவது, 'ஜகத்காரணவஸ்து யாது' என்று
கேட்டால் ஸ்பஷ்டமாக ஒன்றும் தெரிவிக்காமல், காரணவஸ்துவை அஸத்தென்
றும், ஸத்தென்றும், தமஸ்ஸென்றும், ஆத்மாவென்றும், சம்புவென்றும்,
ஹிரண்யகர்ப்பனென்றும், நாராயணனென்றும் இப்படி பலவாறாகப் பேசிற்று.
இப்படியே ஜீவபரஸம்பந்தத்தை பேதமென்றும், அபேதமென்றும், அம்சாம்சி
பாவமென்றும் பேசிற்று. மோக்ஷத்தில் ஜீவனுக்கு ஞானமுண்டென்றும், இல்லை
யென்றும்; சரீரமுண்டென்றும், இல்லையென்றும் சொல்லிற்று. இப்படி எந்த
விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் வேதத்தில் மந்தமதிகளுக்கு ஸம்சயவிபர்ய
யங்கள் தோன்றுமேயன்றி ஓரர்த்தமாவது இப்படித்தானென்று நிச்சயிக்கப்
போகாது. இந்த கஷ்டத்தைத் தவிர்க்கவேணுமென்று ப்ரஹ்மஸூத்ரமும் மற்றும்
பல நூல்களும் வேதார்த்த நிர்ணயம் பண்ண அவதரித்தன. ஆனாலென்ன?
வித்வான்கள் இவற்றுக்கும் வெவ்வேறு வழியில் அர்த்தம் பண்ணி பாஷ்யமிட்டு
ஒன்றுக்கொன்று முரணான பற்பல மதங்களை ஸ்தாபித்து விட்டார்கள். இதனால்
உண்மையான வேதார்த்தமின்னதென்பதே தெரியாமற்போயிற்று.

இந்த ஸமயத்தில் எம்பெருமான்பேரருளால் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு திவ்ய
ப்ரபந்தங்களென்னும் நிதியொன்று அருமையாகக் கிடைத்தது. அவரும் இதின்
பெருமையையாராய்ந்து வேதார்த்தத்தை யறுதியிடுவதற்கு இதுதான் தகுந்த
ஸாதநமெனக் கருதி, தமிழ்வேதமென்கிற விருதுசாற்றி அதை நன்கு ப்ரசாரம்
செய்துவைத்தார். எம்பெருமான் தன்னருளால் மயர்வறமதிநலம் அருளப்பெற்று
ஜ்ஞாநத்தாலும் பக்தியாலும் சிறந்தவர்களான ஆழ்வார்களின் அதிஸ்பஷ்டமான
மதுரதமஸ்ரீஸூக்திகளைக்கொண்டு வேதத்தின் அர்த்தத்தை நிர்ணயிப்பதென்கிற
சிறந்த வழியொன்று அன்று முதலாக ஏற்பட்டது. நமது ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ர
தாயப்ரவர்த்தகர்களான ஆசார்யர்களெல்லாரும் இவ்வழியைத்தான் பின்பற்றி
உபயவேதாந்தப்ரவர்த்தகாசார்யர்களென்கிற விருது பெற்றார்கள். இந்த ஸம்ப்ர
தாயமே தம் திருநாமத்தைக்கொண்டு விளங்கும்படியான ஏற்றம்பெற்ற ஸ்வாமி
எம்பெருமானார் தாமும் இந்த பரம்பரையில் சேர்ந்தவராகையால் திவ்யப்ரபந்தங்
களைத் துணைகொண்டே ஸ்ரீபாஷ்யாதிகளை ஸாதித்தருளினார். ஆனால், ஸேதுமுதல்
இமயமலை வரையில் பரவவேண்டியும், பற்பல பரமதஸ்தரை ஈடுபடுத்தவேண்டியும்
இருக்கும் தமது ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் இத்தமிழ் ப்ரபந்தங்களையும், அவற்
றுக்கு ஆசிரியர்களான ஆழ்வார்களின் திருநாமங்களையும் வெளிப்படையாகக்
காட்டுவது தமது உத்தேசஸித்திக்கு இடையூறாயிருக்குமெனக்கருதி, மருந்தை
உட்கொள்ள இசையாத சிறுவர்க்கு அதை அபிமதவஸ்துவில் மறைத்து ஊட்டு
மாப்போலே மறைமுகமாகவே தமிழ்வேதத்தின் அர்த்தங்களை யூட்டிவைத்தார்.

ஆனால் நாளடைவில் இந்த மருமத்தைப் பலர் அறியப்பெறாமல், எம்பெரு
மானார்ஸ்ரீஸூக்திகளெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலிருப்பதையும், அதிலும், ஆழ்வார்
களின் அல்லது திவ்யப்ரபந்தங்களின் பெயரில்லாமையையும் பார்த்து மருண்டு,

எம்பெருமானார் இவைகளை யுபஜீவிக்கவேயில்லையென்றும் இவற்றையொரு பொருளாகவே மதித்திலரென்றும் கருதி இவைகளை அவமதிக்கத் துணிந்து விட்டார்கள். இம்மாதிரியான அநீதிச்செயல்கள் வலிந்துபோக இவ்வாபத்தை நீக்கவல்ல வீரர் யாரென்று ஆஸ்திகவுலகம் நாற்றிசையும் சுற்றிப்பார்க்கத் தொடங்கிற்று. அப்பொழுது, "உபயவேதாந்தங்களையும் தெளியக்கற்றவன் நாஹம் நாஹம் நசாஹம் நசபவதி புநஸ் தாத்ருசோ மாத்ருசேஷு" என்று சொல்லிக்கொண்டு பண்டித மண்டலியில் பரிகணிதரானவர்களெல்லாம் ஒவ்வொருவராக நழுவத்தொட "இத்யேவம் த்யக்தஹஸ்தே ஸபதி ஸுரகணே பாவரூப்யே ஸமஸ்தே மூலம் ய ப்ராதுராஸீத்" என்ற நிலைமையை இன்று நாமும் ப்ரத்யக்ஷீகரிக்கலாம்படி உலகம் நிறைந்த புகழாளரான நம்முடைய ஸ்வாமி "நானுளேன், அஞ்சவேண்டாம்" என்று கிளர்ந்து த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம் என்கிற இந்த மஹாக்ரந்தத்தை யுபகரித்தருளியிருக்கிறார்.

இதை அனைவரும் ஸாவதாநமாக ஸேவித்து, எம்பெருமானார், ஆழ்வார் திறத்தும் அவர் ஸ்ரீஸூக்திதிறத்தும் வைத்திருந்த மதிப்பின் சீர்மையையும், அதன் பயனாக மற்ற பாஷ்யங்களைவிட ஸ்ரீபாஷ்யாதிகள் பெற்ற சிறப்பையும், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் வேதார்த்தங்களை விவரித்துக்காட்டு மழகையும் கண்டு களிப்பார்களாக. அன்றியும் இப்படிப்பட்ட மஹாக்ரந்தத்தை நமக்குத் தந்தருளின மஹா ஸ்வாமிக்கு ஸ்வரூபாநுரூபமாக க்ருதஜ்ஞதாநுஸந்தாநத்தையும் செய்வார்களாக.

தி. அ. ஸம்பத்குமாரதாஸன், 27—9—5

---

ஸ்ரீ:

# விஜ்ஞாபனம்.

(ஸ்ரீ உவே. வித்வான். வேதவ்யாஸபட்டர், திருமலை ஐயங்கார் ஸ்வாமி, கோயமுத்தூர்)

அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரஸாகரத்தில் விழுந்து நோவுபடும் சேதநர்களை உத்தரிப்பிக்க அவர்களுக்கு தத்வஹித புருஷார்த்தங்களை யுணர்த்துவதற்காக அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமான வேதமும், அதற்கு உபப்ரும்ஹணங்களான பகவத்கீதை, மநுஸ்ம்ருதி, ஸ்ரீவிஷ்ணுபுராணம், ப்ரஹ்மஸூத்ரம் முதலிய சிறந்த நூல்களும் அவதரித்தன. ஆனால் அவற்றில் முக்கியமாக உபதேசிக்கப்படும் பரம்பொருளானது ஸகலசேதநாசேதநவிலக்ஷணமானபடியாலும், வாசகமான ஸம்ஸ்க்ருத பாஷையானது தங்கக்கம்பிபோல் இழுத்தபடியெல்லாம் வருந்தன்மையாலும், இவற்றைக்கொண்டு அர்த்த நிர்ணயம் பண்ணும்போது மஹர்ஷிகளுக்குள்ளேயே பற்பல மதபேதங்கள் ஏற்பட்டுவிட்டனவென்றால் அர்வாசீனபண்டிதர்கள் அபிப்ராயபேதங்கொண்டு விவாதப்படுவதில் வியப்பொன்றுமில்லையன்றோ? இப்படி வேதாந்தத்தில் பல மதங்கள் தோன்றி ஒவ்வொரு மதத்தைச் சார்ந்தவரும் தம் தம் கொள்கைக்கிணங்கும்படியாக ப்ரஹ்மஸூத்ரம், பகவத்கீதை முதலியவற்றுக்கு பாஷ்யமிட வாரம்பித்தார்கள்.

ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபகாசார்யரான ஸ்ரீராமாநுஜரும் தா ஆதரித்துப்போந்த விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தையொட்டி இங்ஙனே பாஷ்யமியற்றியுள்ளார். இவ்வாசிரியரிடத்தில் பக்ஷபாதமின்றியே நடுநிலையில் மன

வைத்து இவருடைய பாஷ்யங்களை ஊன்றி வாசிப்பவர்கள் - விவேக குசலர்களான பாச்சாத்ய பண்டிதர்களுங்கூட, ஸ்ரீராமாநுஜபாஷ்யமே யதார்த்தமான அர்த்தங்களைத் தெரிவிக்குமென்று மிகவும் கொண்டாடி யெழுதியிருப்பதைக் காண்கிறோம். இதற்குக் காரணமென்ன வென்றால், தம்முடைய முயற்சியால் எவரும் அறிய முடியாத எம்பெருமானை "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்றப்போலே அப்பரமன் தானே தன்னை உள்ளபடி காட்டிக்கொடுக்கக் கண்டவர்களாய் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களான ஆழ்வார்கள் காட்டியருளின வழியைப் பின்பற்றி யெழுதினதேயாகும்.

ஆகவே எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளில் உபயவேதாந்தத்தின் பரிமளமும் கமழ வேண்டியதேயாயிற்று. ஆனால் தமிழ்வேதத்தைத்தாம் உபஜீவித்தமையை அவர் எங்கும் வ்யக்தமாகக் காட்டிற்றிலர், அதற்கு முக்யகாரணமென்னவென்றால் ஸம்ஸ்க்ருத பாஷைதான் சிறந்ததென்றும், அந்த பாஷையிலுள்ள வேதந்தான் ப்ரமாணமென்றும் வைதிகர்கள் அக்காலத்தில் கருதியிருந்தபடியால், தேசபாஷையில் இயற்றப்பட்ட க்ரந்தத்தின் பெருமையை ஆஸேதுஹிமாசலம் எல்லாரும் இசையமாட்டார்களென்றும், ஆழ்வார்களின், அல்லது திவ்யப்ரபந்தங்களின் பெயரைச் சொன்னாலும் அஸூயாளுக்கள் ஸஹியாமல், அதே காரணமாக அவ்வர்த்தங்களில் பகை கொள்வர்களென்றும் ஸ்வாமி திருவுள்ளம்பற்றியதேயாகும். ஆகையால் மறைமுகமாகவே ஆழ்வார்களை ப்ரசம்ஸித்தும், அவர்கள் உபதேசித்த அரும்பெரும் அர்த்தங்களை தமது நூல்களில் பொதிய வைத்தும் போந்தார் ஸ்வாமி பாஷ்யகாரர். இப்படி இதரர்களுக்கு மறைக்கப்பட்ட வர்த்தங்களும் உபதேச பரம்பரையில் ஸச்சிஷ்யர்களுக்குக் கிடைத்தே வந்தன.

ஆனால் காலம் செல்லச்செல்ல, உபயவேதாந்தங்களையும் கசடறக்கற்று நிர்வஹிக்கவல்ல அதிகாரிகள் மெலிந்துபோக, இந்த ரஹஸ்யார்த்தங்களும் மறையத் தொடங்கின. இதன் பயனாக ஸ்ரீவைஷ்ணவர்களிலேயே பலர் எம்பெருமானார் ஸாதித்த க்ரந்தங்களெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலேயே யிருப்பதை நோக்கி, திவ்யப்ரபந்தங்களில் அவருக்கிருந்த ஆதராதிசயத்தை அறிய மாட்டாதே, எம்பெருமானார் இவற்றை யுபஜீவிக்கவேயில்லையென்று எண்ணவும் ப்ரசாரம் செய்யவும் துணிந்து விட்டார்கள். இதனால் ஆஸ்திக வுலகத்தில் பெரிய குழப்பம் ஏற்பட்டுவிட்டது

இக்குழப்பத்தை அறவே ஒழிக்கத் திருவுள்ளம்கொண்டு, தற்காலம் "வேதாந்த த்வந்த்வ மார்க்கச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் சத்ருசோந்ய:" என்று நாற்றிசையும் போற்றப்படுபவரான ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ஸ்வாமி ஒப்புயர்வற்ற இந்த க்ரந்தத்தை அருளிச் செய்திருக்கிறார். இதை ஸேவிப்பதனால், நமது பூர்வாசார்யர்கள் ஆழ்வார்களுக்கும், அவர்கள் ஸ்ரீஸூக்திகளுக்கும் எவ்வளவு மதிப்பு கொடுத்திருக்கிறார்களென்பதை நன்கறியலாம். மேலும் இந்த திவ்யக்ரந்தத்தில் இருக்கும் விஷயங்களை நன்கு ச்ரவணமநந நிதித்யாஸநம் செய்பவர்க்கு திவ்யப்ரபந்தங்கள், வேதங்கள், பகவத்கீதை, ப்ரஹ்ம ஸூத்ரம், ஆளவந்தார் முதலிய நம்பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள், ஆகிய இவையெல்லாவற்றிலுமுறையும் ஒப்புயர்வற்ற விசேஷார்த்தங்களெல்லாம் எளிதாக ஹ்ருதயங்கமமாகி அபூர்வமான ஆநந்தவெள்ளம் உள்ளத்தில் கரைபுரண்டு பெருகுமென்பதில் ஐயமில்லை.

இப்படிக்கு,

**வே. திருமலைதாஸன்,**

பட்டர் திருமாளிகை கோயமுத்தூர், 25-9-'54.

---

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



24-9-68

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய

# த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்

---

लक्ष्मीकान्तपदारविन्दयुगलैकान्ताप्रमेयाद्भुत-प्रेमाणं शठकोपसूरिमथ तत्सूक्त्यब्धिमग्नाशयम् ।
श्रीमद्भाष्यकृतं यतीन्द्रमथ तद्भूयोऽवतारायितं श्रीमद्रम्यवरोपयन्तृयमिनं संचिन्तये सन्ततम् ॥१॥

श्रीमद्वरवरयमिनः कृपया परया प्रबोधितानर्थान् ।
संदर्शयन् लिखामि द्रमिडोपनिषत्प्रभावसर्वस्वम् ॥२॥

प्राधान्येन प्रबन्धे त्विह यतिपतिना द्राविडाम्नायवाचां
साहाय्येनैव भाष्याद्यनघकृतिततिर्निर्मितेति प्रसिद्धा ।
वार्ता युक्त्या प्रमाणैरपि च सुविशदं संप्रतिष्ठाप्यते भोः
मात्सर्यं दूरतोऽस्यन् विबुधजन इदं वीक्ष्य मोमोत्तु धन्यः ॥३॥

दिव्यप्रबन्धेषु न वेदतौल्यं न चापि वेदादधिकत्वमस्ति ।
रामानुजार्योऽपि न तत्र रागीत्येवं लिखन्तः कुदृशो नमन्तु ॥४॥

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மிகமிகச் சிறந்த ப்ரமாணமாகக் கொண்டா
டப்பட்டுவரும் திவ்யப்ரபந்தம் வடமொழி வேதந்தோடொத்த தென்றும்,
அதிற்காட்டிலும் மிகச் சீரியதென்றும், ஸ்ரீபாஷ்யகாரரான பகவத்ராமாநுஜ
ரும் இந்த திவ்யப்ரபந்தத்தைத் துணைகொண்டே ஸ்ரீபாஷ்யாதிகளை யருளிச்
செய்தாரென்றும் பரமாப்ததமர்களான நம்முடைய பூர்வாசார்யர்கள் அருளிச்
செய்யுமதில் விப்ரதிபத்தியுடையாரைத் தெளிவிக்கவேண்டி இந்நூல் விரிவாக
எழுதப்படுகின்றது. எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளை ஆழ்ந்து நோக்குவாரில்லை;
இதரபாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தங்கள் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி
களில் பலநூறு காணப்படுகின்றன. அப்படி காணப்படுமிடங்களிலெல்லாம்
ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே அருளிச்செய்ததென்கிற நிர்த்தார
ணத்தை பஹுப்ரமாணோபபத்திகளுடன் இந்நூல் ஸுஸ்பஷ்டமாகத்
தந்திடும்.

---

றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர், முதல்வா! நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே, புகரிலகு தாமரையின்பூ* என்றருளிச்செய்த பாசுரத்தையே (ச்லோ. 116.) "த்ரயோ தேவாஸ் துல்யா:" என்கிற ச்லோகத்தாலே மொழிபெயர்த்தருளினர்.

205. இப்படியாக பட்டருடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்து பன்னியுரைக்குங்கால் பாரதமாம். அடியேனுடைய வியாக்கியானங்களை ஆநுபூர்வியாக கடாக்ஷித்தருள்பவர்க்கு அவற்றிலிருந்து அநவதிகமாக அநுபவிக்கக் கிடைக்குமாதலால் இங்கு இந்த ஸங்க்ஷேபமே பர்யாப்தமென்று நிற்கின்றேன். (28)

---

## 29. உபஸம்ஹாரம்

206. ஆளவந்தார் எம்பெருமானார் முதலான நம் பூர்வாசார்யர்கள் உபநிஷத்துக்களிலும் சாஸ்த்ரங்களிலும் நல்ல விரகர்களாயிருந்துவைத்து ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களைக் கொண்டே போதுபோக்கி வாழ்ந்து வந்தார்களென்பது அவரவர்களது சரித்திரங்களாலும் அவரவர்கள் தாமியற்றிய நூல்களாலும் அறியக்கிடக்கின்றது. சரித்திரங்களிற்புகாது நூல்களிற் புகுந்து விமர்சித்தோமிவ்வளவும். எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்திகளில் மிகவிரிவான ஆராய்ச்சிகளையே செய்தோம். ஆளவந்தார், கூரத்தாழ்வான், பட்டர் ஆகிய மூன்று ஆசாரியர்களை எடுத்துக்கொண்டு இவர்கள் தம் தமது நூல்களில் ஆழ்வார்களைக் கொண்டாடியிருக்கும் விதத்தையும் ஆழ்வார்கள் வெளியிட்டருளின அர்த்தவிசேஷங்களைத் தாங்கள் கையாண்டிருக்கும் விதத்தையும் மிக விரிவாக நிரூபித்து வேறே ஒரு க்ரந்தமியற்றியிருக்கிறோம். அதிலிருந்து ஒரு பகுதியை மாத்திரமே இதில் வெளியிட்டோமிப்போது. முடிவாக எம்பெருமானார் விஷயமான வொருச்லோகரத்நத்தை வியாக்கியானித்து இந்த க்ரந்தத்தை உபஸம்ஹரிக்கிறோம்.

"पुरा सूत्रैर्व्यासः श्रुतिशतशिरोऽर्थं ग्रथितवान् विवव्रे तत् श्राव्यं वकुलधरतामेत्य स पुनः ।
उभावेतौ ग्रन्थौ घटयितुमलं युक्तिभिरसौ पुनर्जज्ञे रामावरज इति स ब्रह्ममुकुरः ॥

[புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதிசதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுளதரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிதுமலம் யுக்திபிரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர:."]

இந்த ச்லோகத்தை முன்னமே (பக்கம் 21ல்) உதாஹரித்திருக்கிறேன். இதனைச் சிறிது விவரித்து இந்த க்ரந்தத்தை நிகமிக்கிறேன். 'வ்யாஹோவாச வ்யாஸ: பாராசர்ய: * என்று வேதம் புகழ்ந்த வ்யாஸரும், நம்மாழ்வாரும், பகவத்ராமாநுஜருமாகிய மூன்று மஹநீயர்களே ஆவ்விதுலகுக்கு மஹோபகாரகர்களென்னுமிடம் மேலெடுத்த ச்லோகத்தில் கூறப்படுகிறது. முதலில் வ்யாஸபகவான் ப்ரஹ்மஸூத்ரமென்கிற சாஸ்

மீமாம்ஸையைப் பணித்து அதிலுள்ள நான்கு அத்யாயங்களிலும் வேதாந்த விழுப்பொருள்களைத் தொடுத்து வைத்தார். அந்த வ்யாஸர்தாமே பிறகு மகிழ்மாலை மார்பரான நம்மாழ்வாராகப் புநரவதாரம் செய்து அந்த சாரீரக மீமாம்ஸைதன்னையே செவிக்கினிய செஞ்சொற்களாலே விவரித்தருளினர். (அதாவது) ப்ரஹ்மஸூத்ரம் முரட்டு ஸம்ஸ்க்ருதமா யிருந்ததைச் செந்திறத்த தமிழோசை யாக்கினது மாத்திரமன்றிக்கே, அதற்கிருந்த முக்கியமான சில குறைகளையும் தீர்த்தார். எங்ஙனேயென்னில்; ப்ரஹ்மஸூத்ரத்தில் எம்பெருமான் காரணபூதனென்பது பரக்க நிரூபிக்கப்பட்டதேயொழிய அவன் பல அவதாரங்களைப்பண்ணி கார்யபூதனுமாகிறு னென்பது ஒரு ஸூத்ரத்திலும் கூறப்படவில்லை. வேதத்தில் * अजायमानो बहुधा विजायते * * पिता पुत्रेण पितृमान् योनियोनौ * இத்யாதி வாக்கியங்கள் எம்பெருமானுடைய அவதாரங்களை ப்ரஸ்தாவித்திருக்கவும் ஸூத்ரகாரர் அதை மீமாம்ஸிக்கப் புகவில்லை. இது அந்த சாஸ்த்ரத்திற்குப் பெரிய குறையே. இன்னமும், எம்பெருமானை ப்ரஹ்மஸூத்ரமானது ஸாமாந்ய சப்தமான ப்ரஹ்மசப்தத்திலேயே சொல்லிக்கொண்டு போந்ததேயொழிய ஒரு ஸூத்ரத்திலும் நாராயண சப்தத்தையிட்டுச் சொல்லிற்றில்லை. இதுவுமொரு குறையே. இன்னமும், எம்பெருமானுடைய அதிசயங்களுள் தலையானது லக்ஷ்மீபதித்வம். இதுவும் ப்ரஹ்மஸூத்ரத்தில் ஓரிடத்திலும் அணுமாத்ரமும் ப்ரஸ்தாவிக்கப்படவில்லை. இங்ஙனே பல குறைகளுண்டு அதற்கு. அக்குறைகளை ஆழ்வார் வெகு அழகாகத் தவிர்த்தருளினர்.

207. எங்ஙனேயென்னில்; நம்மாழ்வாருடைய திருவாக்கில் அவதரித்த நான்கு திவ்யப்ரபந்தங்களுள் முதலது திருவிருத்தம். அது தொடங்கும் போதே *உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!* என்று அவதார ப்ரசம்ஸை செய்தருளினர். அன்றியும் *பிறந்தவாறும்!* என்று சொல்லி ஆறுமாஸம் மோஹித்துக் கிடந்தார். நாராயணதி விசேஷ சப்தங்களைப் பல்லாயிரமுறை புகவிட்டிருக்கிறுர் தமது திவ்யஸூக்திகளில். அப்படியே லக்ஷ்மீபதித்வத்தையும் பன்முறை பணித்தார். ஆக, பல குறைகளுக்கு இடமாக ப்ரஹ்மஸூத்ரம் பணித்த வ்யாஸமஹர்ஷியே மறுபடியும் ஆழ்வாராக அவதரித்து செவிக்கினிய செஞ்சொற்களாலே அக்குறைகளைத் தீர்த்துக்கொண்டாராயிற்று. ஆகவே "விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுளதரதாமேத்ய ஸ புந:" என்கிற இரண்டாம் பாதம் மிகப் பொருத்தமாயிற்று.

208. இனி மூன்று நான்கு பாதங்களினல் பகவத்பாஷ்யகாரருடைய பெருமை சொல்லுகிறது. [உபாவேதௌ க்ரந்தௌ கடயிதுமித்யாதி.] மேலே சொன்ன ஸம்ஸ்க்ருத த்ராவிட சாஸ்த்ரங்களான இரண்டையும் பலபல உபபத்திகளாலே ஏக சாஸ்த்ரமாக்கி நிர்வஹித்தருள ஸ்ரீராமாநுஜராக அந்த வ்யாஸர்தாமே மீண்டுமவதரித்தா ரென்கிறது. உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யரான ஸ்வாமி யெம்பெருமானர் நிர்வஹித்தருளின ப்ரகாரங்களைக் கீழே பரக்க நிரூபித்தோம். ப்ரஹ்மஸூத்ரத்திலே இல்லாதவையாய் ஆழ்வார்

ஸ்ரீஸூக்திகளிலிருந்தே க்ரஹிக்கக்கூடியவையான அர்த்த விசேஷங்களும் நமக்கு பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்திகளிலே காணக்கிடைக்கின்றன வாதலால் விசிஷ்ய மஹோபகாரகர் ஸ்வாமி யெம்பெருமானாரே யாவர்.

209. *க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்* *வ்யாஸாய விஷ்ணுரூபாய* இத்யாதிப்படியே ஸ்ரீமந்நாராயணனே வ்யாஸராக அவதரித்தான்; அந்த வ்யாஸரே நம்மாழ்வாராகவும் எம்பெருமானாராகவும் அவதரித்து ஸ்வவிவக்ஷிதார்த்தங்களை யெல்லாம் [உள்ளே யடக்கிவைத்திருந்தவைகளையுங்கூட விடாமல்] ஸுவிசதமாக வெளியிட்டு உலகத்தை வாழ்வித்தா ரென்றதாயிற்று.

210. ஆழ்வாரருளிச் செயல்கள் போலவே பகவத் பாஷ்யகார திவ்யஸூக்திகளும் கடல்போன் றிருத்தலால் இந்த நூலுக்கு உத்தேச்யமாகக்கொண்ட விஷய விசேஷ விசதீகரணம் ஒரு திவலையளவே ஆயிற்றிதில். க்ரமேண வேறு வேறு நூல்களில் இன்னமும் விசதீகரிப்போமாக. ... (29)

211. शठवैरिकलिवैरिमुखसूरिफणितिष्ववगाह्य यतिराज इह यद्यदलिखत् ।
तदशेषमुपवर्ण्य भवितास्मि नियतं क्रमशश्च कृतकृत्य इति वच्मि सुदृढम् ॥

212. श्रीवैष्णवकुलोत्पन्ना अपि केचिदभाग्यतः ।
अन्यथैव प्रचारेषु निरता इति शोच्यते ॥

213. वस्तुस्थित्या ते खलु महान्तमुपकारमादधुर्जगति ।
यदियं कृतिरवतीर्णा विद्वद्रसिकान्तरात्महर्षकरी ॥

214. इत्थं वादिभयङ्करवंशीयाण्णङ्करार्यसंग्रथितम् ।
द्रमिडोपनिषद्वैभवसर्वस्वं जगति जयतु सततमिह ॥

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசார்யர்**

எழுதிய

**த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்**

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பேயாழ்வார் திருவடிகளே சரணம்.

## மயிலைமாநகர் ஸ்ரீகேசவப்பெருமாள் ஸன்னிதி

# பேயாழ்வார் திருமஞ்சனக் கட்டியம்.

---

நாயிந்தே!

...வ! விஜயீபவ!

உத்யத்பாநுஸஹஸ்ரபாஸ்வரதநும் சுப்ரோர்த்வபுண்ட்ரோஜ்வலம்
கௌசேயாம்பரசோபிநம் ஸ்ருசிரஸ்வச்சோபவீதாங்விதம்.
முக்தஸ்மேரமுகம் தயாஞ்சிதத்ருசம் பத்தாஞ்ஜலிம் பாஸ்வரம்
ஸ்ரீமந்தம் மஹதாக்ஷ்யஸூரிமநகம் ஸம்ஸேவிஷீயாநிசம்.

1. நல்லார் நவில்கின்ற நன்மயிலை மாநகரில்
நலமாக நாமுய்ய வந்துதித்த நற்பெருமாள்!

2. நன்னாரணன் நீங்க மற்றொரு மூற்றதுணை
அன்றேநமக் கென்றுரைத்த வருள்மிகு பெருமாள்!

3. கல்லாத வாதிகளு மல்லாதமாயிகளும்
நில்லாது நீக்கி யருள்நல்லகுணப் பெருமாள்!

4. கலைவலவர் பலர்வாழும் மயிலையெனு மாநகரம்
தழைத் தோங்கக் காதலித்து வந்துதித்த நற்பெருமாள்!

5. எல்லாருமுய்யவென நல்லான நான்மறையை
சொல்லால் தொகுத்தருளவல்ல கலைப் பெருமாள்!

6. ஏரார்ந்த மணிமுடிமேல் சீரார்ந்த துளவணியும்
கேசவனார் புகழ்மாலை யேத்தியுகந்தருள் பெருமாள்!

7. மல்லாண்ட திண்டோளன் மகிமைசொலும் மழிசையர்கோன்
மதிபெற்று வாழ்ந்திடவே அருள்செய்த எம்பெருமாள்!

8. மதிபெற்ற ஞானியர்கள் துதிசொல்லி யனுதினமும்
தொழுதேத்தியுய்ந்திடவே மயிலைநகர் வந்துதித்தோய்!

9. என்னாழி வண்ணன்பால் திருக்கண்டேன் திருமேனி
நிறங்கண்டே னாழிகண்டே னென்றுரைத்த நாவலவா!

10. எம்பிரான்தன் கழல்கண்டேன் ஏழ்பிறப்பும் யானறுத்தேன்
வருநரகம் தீர்மருந்து கண்டேனென் றுரைத்த பிரான்!

11. மாகடலினீருள்ளான் மனத்துள்ளான் மாமலராள்
தனத்துள்ளா னென்றுரைத்த தனிஞானப் பெருங்கடலே!

12. மூவுலகு முண்டுமிழ்ந்து நீரேற்று மூவடியால்
தாவடியிட்டளந்தபிரான் தாளிணையே யடைந்துய்ந்தோய்!

13. திருந்தியசீர்ச் செங்கண்மால் திருக்குணமே தாரகமாய்
மருந்துமது பொருளுமது அமுதுமது வென்றுரைத்தோய்!

14. அலர்மேலோன் கால்கழுவக் கங்கைநீர் கான்றகழல்
தொழுநெஞ்சே வாவென்று துணைதேடி நின்றபிரான்!

15. மண்ணுலக முண்டுமிழ்ந்த வண்டறையுந் தண்டுளபக்
கண்ணனையே காணவெண்ணிக் காதலித்த கற்பகமே!

16. கருமாமுகில் வண்ணன் கார்க்கடல் நீர்வண்ணன்
திருமாமணி வண்ணன் தேசுரைத்த தேசுடையோய்!

17. நால்வேதத்துள்ளானே பாற்கடல்நீருள்ளானே
பாம்பணையின் மேலானே யென்றென்று போற்றிடுவாய்!

18. ஆகாயமூடறுத்து அண்டம்போய் நீண்டவொரு
மாகாயப் பெருமானை மதித்திறைஞ்சும் மாண்புடையோய்!

19. வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதமே பணிந்துய்ந்த பரஞ்சோதீ!

20. அனந்த னணைக்கிடக்கும்மால் அடியேன் மனந்தனணைக்
கிடக்குமிது காணீரென் றுகந்துரைத்த வுத்தமனே!

21. ஒருவல்லித் தாமரையா ளொன்றிய சீர்மார்பனுறை
திருவல்லிக்கேணி சென்று தொழுதுகந்த தூமனத்தோய்!

22. எந்தை பெருமான்த னிணையடிக்கே யாளாகி
மறவாது வாழ்த்தியிடும் மாண்புடைய பெருமானே!

23. வாமனனாய் மாவலிபால் மூவடிமண்ணிரந்தளந்த
நெடுமால் தனிணையடிக்கே யேழ்பிறப்பு மாளானோய்!

24. தெருளாத பிள்ளையா யாலிலைமேல் சேர்குழவி
யருளாலே யிருளற்ற நெஞ்சுடைய நின்மலனே!

25. என்தன் திருமாலே செங்கணெடியானே
எங்கள் பெருமானே யென்றுருகுமெழில் மனத்தோய்!

26. தேசுடைய சக்கரத்தாய் சங்கினாய் சார்ங்கத்தாய்
வாசமலர்த் துழாய்மாலை முடியாயென்றுகந் துரைத்தோய்!

27. சுடராழி யொன்றுடையான் சூழ்கழலே நாளும்
தொடராழி நெஞ்சே யென்றுகந்துரைத்த தூய்மதியோய்!

28. விழுதுண்ட வாயானை மால் விடையேழ் செற்றானை
வானவர்க்கும் சேயானை வணங்கியுய்ந்த பெருமானே!

29. வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
உகந்துறையு மெந்தைகழ லடைந்துய்ந்த வேதியனே!

30. மறைமுடியும் பாற்கடலும் பாடகமு மென்மனமும்
குடந்தையுமே குடிகொண்டா யென்றுரைத்த குணக்கடலே!

31. மந்தரத்தால் மாகடலைக் கடைந்தமுத மந்தரத்தார்க்கு
ஈந்தபிரானருளா யென்றிரங்கேத்து மெழில் மதியோய்!

32. கனலாழி வெண்சங்கம் கதைசார்ங்கம் வெஞ்சுடர்வாள்
இவையேந்தும் பெருமானை யிறைஞ்சியுய்ந்த பெருமானே!

33. எரிசுடரும் மால்வரையு மெண்டிசையு மண்டத்
திருசுடருமிறையேயென்றுகந்தேத்து முயர்மதியோய்!

34. விண்ணெடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
உள்ளுவா ருள்ளத்தே யுளன்கண்டா யென்றுரைத்தோய்!

35. குன்றம் குடையாக ஆகாத்த கோவலனை!
குழலூது மணிவண்ணா என்றுரைத்த குணக்கடலே!

36. மதகளிற்றின் மருப்பொசித்து மேதினியை யிடந்தெடுத்த
பேரகலப் பேரார மார்வனையே உகந்துரைப்போய்!

37. பலகதிர்கள் பாரித்த பொன்முடியானடியிணைக்கே
பூரித்துத் துதிமாலை யிட்டருளும் பூரணனே!

38. துரகவாய் கீண்ட துழாய்முடியாய் நங்கள்
நரகவாயது கீண்ட நாரணனே யென்றழைப்போய்!

39. மாவாயுரம் பிளந்து மாமருதி னூடுபோய்
தேவாசுரம் பொருத தேவனையே துதிசெய்வோய்!

40. மணிநீர்ச்சுனை வளர்ந்த மாமுதலை கோள்விடுத்த
அணிநீல வண்ணத்த னடிபணிந்த அற்புதனே!

41. வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர் தூய்க்கைதொழுதால்
அஃகாவே தீவினையென் றுய்ந்துரைத்த அருள்முகிலே!

42. விரையார் நறுந்துழாய் வீங்கோத மேனி
நிரையார மார்வனையே நினைந்துருகி நின்றோனே!

43 கொங்கணைந்து வண்டறையுந் தண்டுழாய்க் கோமானை
எங்கணைந்துகாண்டுமினி யென்று நைந்த பெருமானே!

44. சிறைசெய்த வாணன்தோள் செற்றான் கழலே
நிறைசெய்து நெஞ்சால் நினைந்துகந்த நின்மலனே!

45. உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி
வைத்தவனை நாடி வலைப்படுத்த வள்ளலே!

46. நரகத்து நம்மை நணுகாமல் காப்பவனும்
நாராயணன் கழலே நாடிநின்ற நாவலவா?

47. தொட்டபடை யெட்டுந் தோலாத வென்றியா
னட்ட புயத்தானை யடைந்துய்ந்த ஆரமுதே!

48. கோள்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான்
தாள்முதலே சார்வென்று சதிர்கண்ட கற்பகமே!

சீராரும் மாடத் திருக்கோவலூ ரதனுள்
காரார் கருமுகிலைக் கண்டுகந்த கலைவலவா!

## (வடிவழகி லீடுபாடு.)

அல்லன்ன குழலும் அகன்ற முகமும்
வில்லன்ன புருவமும் விசால நயனமும்
எள்ளுப்பூ நாசியும் இணைவள்ளக் காதும்
சொற்ப்ரணவ மொழியும் சிவந்த வதரமும்
வெள்ளென்ன வேஷ்டியும் விளங்கு மணியஞ்சலியும்
நேரான புண்ட்ரமும் நிறைந்த மணிவடமும்
கதித்த துடையும் கணை முழந்தாளும்
பல்லவப் பவழத்தைப் பழித்த விரலடியுமாய்

தேவரீர் திருமஞ்சனங் கண்டருள வீற்றிருக்கு மிவ்வழகு
ஏதேனும் ஜகன் மோஹனமோ! ஸ்ரீவைஷ்ணவஸர்வஸ்வமோ?
வேள்வியின் பயனோ? வேதாந்த விழுப்பொருளோ?

நாங்களீதேதென்று மறியாவிவ்வழகுடன் ஊழிதொறு மூழிதொறும்
வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே முநிஸார்வபௌமனே!

1. கலங்காப் பெருநகரம் காட்டுவான் கழலிணையே
காலமெலாம் துதித்திறைஞ்சிக்கசிந்து நின்ற களைதானோ?
2. சென்று குறளுருவாய் முன்னிலம் கைக்கொண்ட
முதல்வனையே முப்போதும் மொழிந்துநின்ற களைதானோ?
3. திருமா மணிவண்ணன் செங்கண்மா லெங்கள்
பெருமா னடியிணையே துதித்துநின்ற களைதானோ?
4. கற்றுக் குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான்
வெற்றிப்புகழ்களையே மொழிந்து நின்ற களைதானோ?
5. தென்குடந்தை தேனூர் திருவரங்கம் தென்கோட்டி
யென்னும் திருப்பதிகள் திரிந்தலைந்த களைதானோ?
6. திரண்ட ருவிபாயும் திருமலை மேலெந்தைக்கு
அத்தாணிச் சேவகமே செய்துநின்ற களைதானோ?
7. இரணியன தாகத்தை அரியுருவாய்ப் பிளந்தொழித்த
அமல னடியிணையே வாழ்த்தி நின்ற களைதானோ?
8. விண்ட மலர் கொண்டு விறல்வேங் கடவனையே
கண்டு வணங்கிக் கசிந்துநின்ற களைதானோ
தேவரீர் மஞ்சனமாடி யருள்வதே
நலமாக வண்ணலே நல்லெண்ணெய் மஞ்சளால்
நன்பஞ்சனங் கொண்டு நாடொறும் வாழ்கவே.

ஸ்நாநீயம் கநஸாரகுங்குமலவங்கைலாதிபிர் வாஸிதம்
ஸௌவர்ணேஷு கடேஷு சுத்தஸலிலம் பூர்ணம்புரஸ் திஷ்டதி.
கௌசேயஞ்ச சரச்சசாங்கதவளம் ஸித்தாவயம் கிங்கரா:
காருண்யம் கருணாநிதிர் விதநுதாம் ஸ்ரீமாந் மஹாந் யோகிராட்.

அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை ஸஹஸ்ரதாரை
பட்டர் மங்கள வாத்யம்.
பேயாழ்வார் திருவடிகளே சரணம்.

---